எங்கெங்கிருந்தெல்லாமோ அவை வந்தன, குழந்தைக்குப் பரிசுகளை ஏந்தி. 'என்னுடைய பலத்தை உனக்குக் கொடுக்கிறேன்' என்றது யானை. 'என்னுடைய சுறுசுறுப்பைத் தருகிறேன்' என்றது மான். 'வலுவான என் பற்கள்' என்று முன்வந்தது முயல். 'கூர்மையான பார்வை' என்றது மிஸ்டர் மியாவ். 'உறுதியான எலும்புகள்' என்று கர்ஜித்தது சிங்கம். 'நோய்களை எதிர்க்கும் சக்தி'யைத் தர முயன்றது கரடி.

'இந்த அதிசய அமுல் டின்னிலுள்ள ஆசிகள் அனைத்தையும் வழங்குகிறேன்' என்றது அறிவு முதிர்ந்த ஒரு குரல்.




**அமுல்** பால் உணவு குழந்தைகளுக்குத் தேவையான வைட்டமின்கள் நிறைந்தது.

இந்தியாவின் ஏகபோக விநியோகஸ்தர்கள்: VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.



ASP/ABF/51-TAM

ஜசாமு எழுதும்

சரித்திரத் தொடர் கதை

# வெண்ணிலவுப் பெண்ணரசி



## கல்கி

அக்டோபர் 
16ந்தேதி இதழில் ஆரம்பமாகிறது

# கல்கி பொருளடக்கம்

பரபவ, ஆவணி 26 ○ செப். 11



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## நினைவுத் திரையில்...

சில தொழிலாளிகள் ஒரு பெரிய பள்ளம் தோண்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கறுகறுப்பாக வேலை செய்யாததைக் கண்டு மேஸ்திரி 'எல்லாரும் வெளியே வாருங்கள்' என்றான். தொழிலாளிகளும் வெளியே வந்தார்கள். சரி, 'குழியில் குதியுங்கள்' என்றான். அப்படியே குழியில் குதித்தார்கள். மீண்டும் 'எல்லாரும் வெளியே வாருங்கள்' என்றான். அப்படியே எல்லாரும் வெளியே வந்தார்கள். மேஸ்திரி மேலும் மேலும் இப்படியே மாறி மாறி உத்தரவு போட்டதைக் கண்டு ஒரு தொழிலாளி, அதன் கருத்து என்ன என்று அவனை விசாரித்தான். அதற்கு அம்மேஸ்திரி 'உங்கள் பூட்ஸ் காலில் ஒட்டிக் கொண்டு வெளியே வரும் மண்கூட உங்கள் மண்வெட்டியில் வரமாட்டேன் என்கிறது' என்றான். -கல்கி, ஜூலை 15, 1945




முடியாதது எதுவும் இல்லை. இந்த ஊசிக்கண் வழியாக யானை போகும்!
நான்காம் திட்டம்
நிதிவசதி
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ■ இதழ் 6



# வாக்குச் சீட்டு — மக்களின் காப்புச் சீட்டு

“நம் நாட்டுப் பொருளாதாரத்தைப் பிடித்துள்ள உக்கிரமான நோயிலிருந்து தப்பிப் பிழைக்க இன்னமும் மருந்து வைத்திருக்கிறோம்; நான்காம் திட்டம்தான் அந்த மருந்து” என்று திட்டக் கமிஷன் நிபுணர்களும், ஆட்சி பீடத்திலுள்ளவர்களும் கூறுகிறார்கள். நோயை விளைவிக்க எது காரணமோ, அந்தக் காரணத்தையே மேலும் வலுப்படுத்தி விட்டு, ‘கஷ்ட நிவாரணம் தருவோம்’ என்று பகுத்தறிவுக்குப் பொருந்தாமல் பரிகாரம் சொல்கிறார்கள். இந்தியாவின் இன்னல்களுக்கெல்லாம் காரணம் கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள்தான். இப்போது அவற்றை விடப் பெரிதாக நான்காவது திட்டம் ஒன்றைப் போடுவது நோயின் கொடுமையை அதிகமாக்கத்தான் செய்யுமே ஒழியக் குணப்படுத்த உதவாது என்பது சிறிதளவு அறிவுள்ளவர்களுக்கும் புரியும்.

23,750 கோடி ரூபாய்க்குப் புதிதாகத் திட்டமிட்டு, அதில் 16,000 கோடி ரூபாயைச் சர்க்கார் துறையில் செலவிட வேண்டுமென்று உத்தேசித்திருக்கிறார்கள். இந்த 16,000 கோடி எப்படிக் கிடைக்கும்? பல புதிய வரிகளைப் போடுவார்கள். பழைய வரி விகிதங்களை உயர்த்துவார்கள். உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் கடன்களை வாங்கிக் குவிப்பார்கள். ரயில் டிக்கட் விலையை உயர்த்துவது போன்ற பல இனங்களில் சர்க்கார் கையிலுள்ள தொழில்களில் அதிக வருவாய்க்கு வழி செய்து கொள்வார்கள்.

இதில் கடன் கொடுமையைப் பற்றிப் பிரத்தியேகமாகச் சொல்ல வேண்டும். விலைவாசி உயர்வாலும், வரி உயர்வாலும் மக்களின் சேமிப்பு நாள்தோறும் குறைந்து கொண்டே வந்தபோதிலும், இந்தியாவுக்குள்ளேயே 2500 கோடி ரூபாய்க்குக் கடன் திரட்ட எண்ணமிட்டிருக்கிறார்கள். இது பலவந்தத்தினாலன்றி வேறு விதத்தில் சாத்தியமில்லை என்பது கண்கூடு. வெளிநாடுகளிலிருந்து 4300 கோடி ரூபாய் கடன் வாங்க உத்தேசித்திருக்கிறார்கள். அதாவது இப்போதுள்ள கடன்களையே தீர்க்க முடியாமல் செலாவணிச் சிக்கலில் மாட்டிக் கொண்டு, ரூபாய் மதிப்பைக் குறைத்த பின்பும், முன்னிருந்ததைவிட இரு மடங்கு புதிதாக அந்நியக் கடன் வாங்கப் போகிறார்கள்! ஏற்கனவே உள்ள பண வீக்கம் போதாதென்று மேலும் ரூபாய் நோட்டுக்களை அச்சிட்டு வெளியிடப் போவதும் நிச்சயம். இதனால் விலைவாசிகள் வான மண்டலத்தில் விண்வெளிப் பயணம் செய்யப் புறப்படப் போவதும் நிச்சயம். இந்தியாவைத் தவிர வேறெங்காகிலும் இவ்வாறு வரிகள், கடன்கள், பணவீக்கம், விலைவாசி இவற்றையெல்லாம் தங்கு தடையின்றி உயர்த்திக்கொண்டே போகிற அரசாங்கம் நடக்க முடியுமா? இன்றுள்ளவர்களின் ஜீவ ரத்தத்தை உறிஞ்சுவதோடு, நம்முடைய குழந்தைகளின் தோள்களிலும் வருங்காலத்தில் தீர்ப்பதற்காகக் கடன் பளுவைச் சுமத்துகிறவர்கள் ஆட்சி பீடத்தில் இருக்க இனியும் நாம் அனுமதிக்கலாமா?

உண்ணப் பிடி சோறு கேட்கிறவர்களிடம் பிரம்மாண்டமான கணக்குகளைக் காகிதத்தில் எழுதிக் காட்டுகிறார்கள். இந்த மாயக் கற்பனைக் கணக்கை இன்னமும் விழுங்கி நாம் ஏமாறுவோமா என்பதே கேள்வி.

‘விலைவாசி’ என்கிற முக்கியமான அம்சத்தை நாம் ஒருகாலும் மறக்கலாகாது. நான்காம் திட்டம் அமுலாகுமாயின், அதாவது சர்க்கார் 16,000 கோடி ரூபாய் செலவழிக்குமாயின், விலைவாசிகள் ஏகத்தாறாக உயரும். இப்போதே வாழ்க்கை நடத்த முடியாமல் திண்டாடும் ஏழை மக்களால் இந்த

விலை உயர்வைத் தாங்கவே முடியாமற் போகும். ''ஆகா, இதுதான் சோஷலிச சொர்க்கம்'' என்று திருவாளர் அசோக மேத்தா அவர்களும், மற்ற காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் கூறுவதற்காக ஏழை இந்தியன் இந்த இன்னலை ஏற்க முடியாது. விலைவாசி உயர உயர, மக்கள் அதிக ஊதியம் கேட்க வேண்டியது அவசியமாகும். இதை ஓரளவுக்கேனும் ஈடு கட்டுவதற்காகச் சம்பளங்களை உயர்த்தவேண்டியிருக்கும். இதற்காகப் பணவீக்கத்தைப் பெருக்குவார்கள். விஷச் சுருள் போல், மக்களின் வாழ்க்கைச் செலவு உயர்வதால் பொருள்களின் விலை மேலும் உயரும். இந்த விலை உயர்வு ஐந்தாண்டுத் திட்டத்தையும் பாதிக்கும் என்பதை நாம் குறிப்பாகக் கவனிக்க வேண்டும். அதாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்காக வாங்கும் பொருட்களுக்காகவும் இப்போது நினைப்பதைவிட அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கும். இதன் பொருள் என்ன? இப்போது 24000 கோடி ரூபாய்க்குத் தீட்டியுள்ள திட்டத்துக்காக உண்மையில் 24,000 கோடியைவிட அதிகமாகச் செலவிட வேண்டியிருக்கும். இந்த அதிகச் சுமையும் மக்கள்மீதுதான் விழும்.

திட்டத்துக்கும், திட்டத்தின் சிருஷ்டிகர்த்தர்களான காங்கிரஸுக்கும் இன்னொரு தவணை கொடுத்தோமாயின் இவ்வளவு உற்பாதங்கள் விளையும் என்று அறிந்தபோதிலும் சில பிரமுகர்கள், ''காங்கிரஸிடம் எத்தனையோ குறைகள் இருந்தாலும் அதனிடம் பலம் இருக்கிறதே, அதனிடம் ஸ்திரத் தன்மை உள்ளதே!'' என்கிறார்கள். இந்தப் பலமும் ஸ்திரத்தன்மையும் நன்மைக்குப் பதில் தீமையே பெருகக் காரணமாயிருக்கின்றன. தவறுகள் செய்கிற ஒரு கட்சி, ஊழல் மலிந்த ஒரு கட்சி, பலமும் ஸ்திரத் தன்மையும் படைத்திருப்பதால் அதன் கொடுமையன்றோ வலுக்கும்? நாட்டுப் பொருளாதாரத்தையெல்லாம் தன் கையில் அடக்கிக் கொண்டிருப்பதால்தான் இன்று காங்கிரஸ் பலம் படைத்திருக்கிறதேயன்றி, சீலமான கொள்கைகளால் அல்ல. ராவணனுக்குக் கூடத்தான் பெரும் பலம் இருந்தது. அவன் தலைகளை வெட்ட வெட்டப் புதுத் தலைகள் முளைத்தன. அவனுடைய கைகளை வெட்டினாலும் அவற்றினிடத்தில் புதிய கைகள் தோன்றிக்கொண்டிருந்தன. இது காரணமாக ராவணன் ஆட்சி நல்லது என்று ஏற்க முடியுமா? ராவணன் போன்றவர்களிடம் பலமும் ஸ்திரத் தன்மையும் கூடும் போது அது அவர்களை மேலும் விலக்கத்தக்கவர்களாக்குகிறதேயன்றி, ஏற்கத் தக்கவராக்கவில்லை. எனவே, 'பலம் வாய்ந்த கட்சி', 'ஸ்திரத் தன்மை பொருந்திய கட்சி' என்ற பெயரில் காங்கிரஸை ஆதரிப்பது குழப்பத்துக்குத் தீர்க்காயுள் அளிப்பதாகவே ஆகும்.

காங்கிரஸை ஆட்சியில் அமர்த்தாவிடில் நாட்டில் அராஜகம் ஏற்பட்டு விடும் என்று யாரும் அஞ்ச வேண்டாம். காங்கிரஸ் தவிர வேறெந்தக் கட்சியும் ஆள முடியாத அவல நிலைக்கு அரசியல் சாஸனம் வழி வகுக்கவில்லை. ஒரு கட்சி பதவியிலிருந்து இறங்கிய பின்னும் நாட்டு நிர்வாகம் நிலைகுலைந்து விடாமலிருக்க அரசியல் சாஸனம் போதிய காப்புக்கள் அளித்துள்ளது. காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்கினால் நாட்டில் ஒழுங்கை நிலவச் செய்யும் நல்ல அரசாங்கம் நிச்சயமாக உருவாகும். திவாலா நிலைக்கு இழுத்துச் செல்லும் ஆட்சி முடியும். காங்கிரஸ் ஜமீன்தார்களின் பயமுறுத்தலுக்கு மக்கள் அடிபணிந்துவிடக் கூடாது. அவர்கள் தருகிற லஞ்சத்திலும் மசிந்து விடக் கூடாது. இன்று வோட்டுக்காக, லஞ்சம் தருவதுபோல் ஏதோ சிறு நன்மை செய்வார்கள். அவ்வளவே. தேர்தல் முடிந்தபின் வரிச் சுமையை இதே மக்கள்மீது ஏற்றி விடுவார்கள். இந்த அபாயத்தை வாக்காளர்கள் உணரவேண்டும்.

நான்காம் திட்டத்தில் அடங்கியுள்ள தீமையைப் புரிந்து கொண்டு, 'இது வேண்டாம்' என்று குரல் கொடுக்க வேண்டும். காங்கிரஸுக்கு எதிராகப் போடும் வோட்டுக்களே அந்தக் குரலை எழுப்பும். வாக்குச் சீட்டின் மூலம் மக்கள் தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும். 1967ம் ஆண்டுத் தொடக்கத்தில் நடைபெறும் பொதுத் தேர்தலுக்குப்பின் ராஷ்டிரபதி புதியதொரு சர்க்காரை அமைக்குமாறு மக்கள் செய்தால் தான் தங்களை ரட்சித்துக்கொள்ள முடியும்.

# 22 காரட் தங்கம்: 14 காரட் நோக்கம்?

தங்கக் கட்டுப்பாட்டைப் பலவிதங்களில் தளர்த்தியிருக்கிறார்கள். சந்தேகமின்றி வரவேற்க வேண்டிய விஷயம்தான். ராஜாஜி அவர்கள் இதனை இரு கைகளையும் விரித்து வரவேற்றிருக்கிறார்கள்.

ஆனால், ஒரு கேள்வி. நோக்கம் மட்டுமின்றி உபாயமும் தூய்மையாக இருக்கவேண்டும் என காந்தியடிகள் விதித்தார். இங்கு காரியம் எதுவாயினும், ஆட்சியாளரின் நோக்கத்தின் தூய்மை பற்றிக் கேள்வி எழுவது நியாயம். தேர்தலை மனத்தில் கொண்டே, பொற்கொல்லர்களை வசப்படுத்த 14 காரட் கட்டுப் பாட்டை நீக்கியிருப்பார்களோ என்று எண்ண இடமுண்டு. உண்மையான மனமாறுபாடு இருக்குமாயின் அது இன்னும் எல்லாத் துறைகளிலும் பிரதிபலித்துப் பல ஆதாரக் கொள்கைகளையே மாற்றிக் கொள்ள உதவவேண்டும். 14 காரட் தங்கத்தை 22 காரட்டாக்கினால் போதாது. மனத்தின் மாசும் நீங்கி, சொக்கத் தங்கமாக வேண்டும்.

கடந்த சில ஆண்டுகளாகப் பொற்கொல்லர்களுக்குச் செய்த அநீதத்தை நாடு மறந்துவிடாது. முன்யோசனையின்றிச் சட்டம் போடுவதும், அந்தச் சட்டத்தினால் மக்களுக்கு ஏற்படும் கொடுமைகளை அலட்சியம் செய்வதும், பிறகு சட்டத்தின் விளைவாகக் கட்சிக்கே ஊறு நேரும் என்று தோன்றும்போது அதை ரத்து செய்வதும் பாரத சர்க்காரின் பழக்கமாகிவிட்டது. நல்லது எதுவும் செய்யாமல், நடுவிலே ஒரு கொடுமையைச் செய்து, பிறகு அதை நீக்கிவிடுவதால் மட்டும் நல்ல பெயர் வாங்கிவிட நினைக்கிறார்களோ?

# என்ன சேதி?

### கரூர் மகாநாடு

கரூரில் திருச்சி ஜில்லா சுதந்திரக் கட்சி மகாநாட்டை திரு முத்துசாமி கவுண்டர் அவர்கள் வெகு சிறப்பாக நடத்தினார். கோவை அ. அய்யாமுத்து அவர்கள் தலைமை வகித்தார். திரு சா. கணேசன், எம். எல். ஏ. திரு ஜி. கே. சுந்தரம் எம். பி. போன்ற தலைவர்களும், திரு ராமதாஸ் பாரதி போன்ற தொண்டர்களும் மகாநாட்டில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றிப் பல தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள். ராஜாஜி மகாநாட்டிலும், மாலை பொதுக்கூட்டத்திலும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

திருச்சியில் காங்கிரஸ் மகாநாடு வெற்று ஆடம்பரங்களுடன் நடந்து கொண்டிருந்த போதே கரூரில் படாடோபமோ, ஆடம்பரமோ அற்ற, சிந்தனையைக் கிளறும் வகையில் நடைபெற்ற சுதந்திரக் கட்சி மகாநாடு பொதுமக்களுக்கு எது பணக்காரக் கட்சி என்பதை நிரூபித்து விட்டது.

### ஏன் எதிர்க் கட்சி[?]

சென்னை நகர பலசரக்கு (கிராணு) வியாபாரிகள் காங்கிரஸ் கட்சிக்குப் பத்தாயிரம் ரூபாய் வழங்கியிருக்கிறார்கள், முதல் மந்திரி திரு பக்தவத்சலத்திடம். முதன் மந்திரி பணத்தைப் பெற்றுக் கொண்டு, காங்கிரஸ் ஆட்சியாளர் தவறு பல செய்திருந்தாலும், எடுத்துக் காட்டப்பட்டால் திருத்திக் கொள்ளும் தன்மை படைத்தவர்கள் என்று கூறி யிருக்கிறார். இவ்வாறு தவற்றை எடுத்துக் காட்டவே எதிர்க் கட்சி அவசியம். ஆளும் கட்சியினருக்குப் பதவி போய் விடுமோ, தேர்தலில் தோல்வி கிட்டிவிடுமோ என்ற நிரந்தர அச்சம் இருந்தால்தான் தவறு செய்யாமலிருப்பார்கள். ஆகவே, ஜனநாயகத்திலும், நாட்டு நலனிலும் அக்கறையிருக்குமானால் சுதந்திரத் தொழில் புரியும் சிறு கடைக்காரர்களும், வர்த்தகர்களும் எதிர்க் கட்சிகளுக்கு உதவி அளித்துப் பலப்படுத்த வேண்டுமே யொழிய ஆளும் கட்சிக்கு அல்ல!

# இந்து தர்மத்துக்கு ஓர் இழப்பு

பண்டிதராஜ, சாஸ்திர ரத்னாகர ஆசார்ய வேங்கடேச தீட்சிதர் அவர்கள் சென்ற ஆகஸ்ட் 14ம் தேதியன்று காலமானார் என்ற செய்தி பாரதப் பண்பாட்டிலும் சமஸ்கிருதக் கல்வியிலும் அக்கறையுள்ளவர்களுக்கெல்லாம் பெருத்த துயரம் தரும் செய்தியாகும். ஸ்ரீமான் வேங்கடேச தீட்சிதர் அவர்கள் பம்பாய் பாரதீய வித்தியாபவனத்துடன் இரண்டறக் கலந்து சமஸ்கிருத மொழி வளர்ச்சிக்குப் பலப்பல அரிய திட்டங்கள் வகுத்துச் செயலாற்றி வந்தார். பாரதீய வித்யாபவனத்தின் ஸ்தாபகரும் தலைவருமான ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்கள், ''பாரதீய வித்யாபவனத்தின் தூண் ஒன்று சரிந்தது'' என்று சொல்லும்போது, அதில் தொக்கி நிற்கும் உண்மையையும், அவரது துயரத்தையும் உணர முடிகிறது. தீட்சிதர் மறைவு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.

தமது வடமொழிக் கல்வி மூலமே பாரத நாட்டில் ராஷ்டிரபதி மாளிகை வரை தம்மை மதித்துக் கௌரவிக்கும் பெருமையைத் தேடிக் கொண்டார் ஸ்ரீ வேங்கடேச தீட்சிதர். பாரதீய வித்யாபவனத்தின் நிகழ்ச்சிகள் தேசத்தில் எங்கு நடைபெற்றாலும் சரி, தீட்சிதர் அவர்கள் அங்கே யிருப்பார். பவனத்தின் சார்பில் தமது கணீர் என்ற குரலில் வடமொழியில் வரவேற்புரை நல்கி, சபையோரை வியப்புக் கடலில் ஆழ்த்தி விடுவார்.



மிக மிகச் சொற்ப வடமொழி ஞானமே உள்ளவர்கள்கூடத் தம் பேச்சைப் புரிந்து கொள்ளச் செய்வதோடு, மிக மிக நெருடலான 20ம் நூற்றாண்டின் அரசியல் விஞ்ஞானக் கருத்துக்களையும் தமது உரையில் வெளியிட்டு, வடமொழியில் இக்கருத்துக்களையும் இவ்வளவு லாகவமாகக் கூறிவிட முடியுமா என்ற பிரமிப்பை யூட்டி விடுவார்.

பம்பாய் மாதுங்காவுக்குச் சென்றால், தமிழ் நாட்டில் இருப்பது போல் சங்கரஜயந்தியும், ராமநவமி உற்சவங்களும், யாகங்களும் யக்ஞங்களும் நடப்பதைப் பார்த்துவிட்டு வியக்காதவர்கள் இல்லை. இப்படிப் பம்பாய் பட்டணத்தை ஆஸ்திக ஜோதி தர்மத்தில் ஆழ்த்திய பெருமையில் பெரும் பங்கு தீட்சிதருக்கு உண்டு. சென்ற இருபதாண்டுகளுக்கு மேலாக பம்பாய் மக்களின் ஆஸ்திக வளர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றி யிருக்கிறார்.

அவர் சங்கர மடத்தில் அமர்ந்து மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த போதே, இறைவன் அவரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டார். அதாவது கர்மயோகியாக மறைந்தார். தீட்சிதர் மறைந்தாலும் பாரதீய வித்யாபவனத்தின் கிளைகள் தீட்சிதரின் பெரும் பணியையும், பெருமையையும் எடுத்தியம்பிக் கொண்டேயிருக்கும்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

திடீரென நான் மிகவும் சுகவீனமடைந்ததால் பல காரியங்கள் தடுமாறிப் போயின. அதிகம் எழுதக்கூட இயலாமற் போயிற்று. இன்னும் பூரண குணம் அடையவில்லை. உடம்புக்கும் அறிவுக்கும் அதிக வேலை கொடுக்க இயலாமலே இருக்கிறது.

இருப்பினும் தங்கக் கட்டுப்பாட்டு உத்தரவு நீக்கப்பெற்றதைப் பற்றிச் சந்தோஷம் தெரிவித்துக் கொள்கிறேன். நம் அன்புக்குரியவர்களும், கைவேலையில் தேர்ந்தவர்களுமான பொற்கொல்லர்களை வேலை இல்லாமற் செய்த கட்டுப்பாடு போய் விட்டது. ஸ்ரீ மொரார்ஜி தேசாய் கட்டுப்பாட்டைப் பிறப்பித்த நாளாக இதைத்தான் நான் விரும்பி, மீண்டும் மீண்டும் கூறி வந்திருக்கிறேன். இப்போது பிரதமருக்கு என் ஆசியையும், பாராட்டுதல்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவின் நிர்வாக பீடத்தில் ஒரு பெண்மணி விதிவசமாக அமர்ந்தது வீணுக்காக அல்ல என்று இப்போது தெரிகிறது. இந்தியாவின் கிராமப்புறப் பெண்மக்களின் உணர்ச்சியை ஒரு பெண்தான் உணர முடியும். தேசத்தின் எளிய பொருளாதாரத்தில் பொற்கொல்லர்கள் பெற்றுள்ள பங்கையும் பெண்தான் உணர முடியும். மக்களின் சமூக வழக்கங்களும், ருசிகளும், சமய நம்பிக்கைகளும், அவர்களது பொருளாதாரத் தேவைகளிலிருந்து தனிப்பட்டவை அல்ல. இவற்றையெல்லாம் தங்கக் கட்டுப்பாட்டின் மூலம் யோசனையின்றி, இரக்கமின்றிச் சிதைத்திருந்தார்கள். ஸ்ரீமதி இந்திரா காந்தி இந்த ஒழுங்கீனத்தைச் சரிப்படுத்தி விட்டார். இதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

★

ஐ. நா. தலைமைக் காரியதரிசிப் பதவியிலிருந்து விலகி விடுவதென ஊதாண்ட் அவர்கள் முடிவு செய்திருப்பது குறித்து அனைவரும் வருந்துகிறார்கள். நானும் வருத்தத்தில் பங்கு கொள்கிறேன். எனினும், களைத்துப் போன ஒருவர் இந்தப் பெரும் பதவியை வகிக்காமல், விட்டுவிட முடிவு செய்ததே நல்லது என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். ஐ. நா. தலைமைக் காரியதரிசிப் பதவி என்பது 'நல்லது நடக்குமாறு செய்யலாம்' என்பதில் மகத்தான மன உறுதியும், நம்பிக்கையும் காட்ட வேண்டிய ஸ்தானமாகும். இதை எழுதும் போது, ஊதாண்டுக்கு முன் பதவி வகித்த முனிவர் ஹாமர்ஷீல்ட் அவர்களின் உருவம் என் கனவு காணும் கண் முன் நிற்கிறது. அவர் இந்தப் பதவிக்கென்றே பிறந்தவர். அவரைப் போல் தம் பணியில் உயிரை வைத்துள்ள ஒருவர் இந்த ஸ்தானத்தில் அமர வேண்டும் என்பதே நம் தேவை. பிறர் மீது குற்றம் சாட்டிப் பொறுப்பைக் கழிப்பவரால் பயனில்லை. சங்கடங்களும், ஏமாற்றங்களும் ஏற்பட்டாலும் அந்தத் தடைகளை மனம் கலங்காமல் கடக்கும் மார்க்க அரேலியர் போன்ற ஒருவர் தேவை. தொந்தரவுகளும் தோல்விகளும் ஏற்பட்டால், இவற்றிலிருந்து எதிர்காலத்தில் நம்பிக்கை இழந்து, செயலூக்கம் குன்றிப் போகிறவர்கள் இந்தப் பதவிக்கு உதவாது. காரியம் செய்பவர் நமக்குத் தேவை; காரியமற்றிருப்பதில் பற்று வைத்தவர் நமக்குப் பிரயோசனப்படமாட்டார். 'மா தே ஸங்கோஸ்த்வகர்மணி— செயலின்மையில் உனக்குப் பற்று வேண்டாம்' என்பதே கீதையின் உபதேசமாகும்.

★

நான்காம் திட்டத்துக்கு எதிர்பார்க்கும் அளவு அந்நிய உதவி கிடைக்கக் கூடிய வாய்ப்பில்லை என்று தெரிகிறது. சமீபத்தில் எடுத்த கணக்குப்படி தேசத்தின் சேமிப்பும் குறைந்து வருவதாகவே தெரிகிறது. இந்நிலையில் வகுக்கப்பட்டுள்ள நாலாம் திட்டம் யதார்த்தத்துக்கு ஒவ்வாது என்பது பேராசிரியர் ஷெனாய் அவர்களின் கருத்து. தாம் பேசுவதன் பொருளை முற்றும் உணர்ந்த தொழிலதிபரான ஸ்ரீ எஸ். எல். கிர்லோஸ்கர் அவர்கள், 'நான்காம் திட்டம் நடைமுறைக்குச் சாத்தியமற்ற ஓர் ஏமாற்று; நேர்மைக் குறைவான தேர்தல் விஞ்ஞாபனமே திட்டமாக உருவெடுத்திருக்கிறது' என்று கருதுகிறார். பிடிவாதமாகத் திட்டத்தை அமுல்படுத்தினால், முதல் மூன்று திட்டங்களால் ஏற்பட்டதைவிட அதிக உற்பாதம் சம்பவிக்குமென்றும், பணவீக்கம் பெருகி மீண்டும் ரூபாயின் மதிப்பைக் குறைக்க நேருமென்றும் அவர் கூறுகிறார்.

★

'நாடிழந்த இருபது லட்சம் மக்கள் நல்லதொரு தேசமாக அமைத்துள்ள இஸ்ரேலை நமது சர்க்கார் ஏன் அங்கீகரிக்கவில்லை என்பதற்குக் காரணம் புரியவில்லை' என்று ஸ்ரீ நிரஞ்சன் மஜூம்தார் எழுதியிருக்கிறார். 'வெளிப்படை ஒரு காரணமும் கூறப்படவில்லை. இது ஓர் ஆபாச விஷயம் போல் இதனை விவாதிப்பதையே புதுதில்லி வெறுக்கிறது. நம் கொள்கையில் தருமமும் இல்லை, பிரத்யட்ச உணர்வும் இல்லை என்று இஸ்ரேல் நினைக்கிறது' என்கிறார் மஜூம்தார்.



### அத்தியாயம் 2

# இசை பிறந்தது!

மேர்தாவில் சந்திரப் பிஞ்சாக நாம் கண்ட பெண் குழந்தை இன்று பூரண சந்திரனாக வளர்ந்து மேவார் சாம்ராஜ்யத்தின் தலைநகரான சித்தோர் அரண்மனையின் உப்பரிகையில் தன்னந் தனியளாக உலவிக் கொண்டிருக்கிறாள்.

ஆனால் பூரணசந்திரனைக் கருமேகம் மூடிக் கொண்டிருக்கிறது. கார்மேகவண்ணனின் நினைவு அவளைச் சூழ்ந்து வதைக்கிறது.

நல்ல வசந்தகாலம். மாலை மங்கும் வேளையில் சம்பகமும் சமேலியும் பூத்துக் குலுங்கிச் 'சுரீல்' என்ற மணத்தை உத்தியானவனம் முழுதும் நிரப்புகின்றன.

திடீரென வெகு அண்மையிலேயே கூரிய மணம் வருகிறது! அவள் சிந்தனை கலைந்து தன் சுற்றுப்புறத்தின் நினைவுக்கு வருகிறாள்.

'திவாதாரி'கள் எனப்படும் சேடிகள் தட்டுத் தட்டாகத் தீபங்களைக் கொண்டு வந்து மாடத்தின் கைப்பிடிச் சுவர் முழுவதிலும், அதனை அணைத்து அமைத்துள்ள வளைவுகளிலும் வைக்கிறார்கள்.

தன் சேலையின் அருகு அந்தத் தீபங்களில் படக்கூடும் என்பதைக்கூடப் பொருட்படுத்தாமல் அவள் நின்ற இடத்திலேயே சிலையாகச் சமைந்திருக்கிறாள். தாரகைகளுக்கு இடையே கருவானம் போல, சுற்றிலும் தீபங்கள் தீக்கொழுந்தை ஆட்டிக் கொண்டு ஜொலிக்கும்போதே அவற்றுக்கு இடையில், தான் ஓர் இருளாக நிற்பது போல அவளுக்குத் தோன்றுகிறது.

''ராணிஜி, உற்சவத்துக்கு வரவில்லையா?'' என்று தயங்கியபடியே கேட்கிறாள் ஒரு சேடி.

'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டுகிறாள் அவள்.

''நீங்கள் வராவிட்டால்....'' மென்று விழுங்கிக் கொண்டு சேடி தொடருகிறாள்: ''நீங்கள் வராவிட்டால் பாய்ஜிராஜ்... கோபித்துக் கொள்வார்கள்.''

பாய்ஜிராஜ் என்றால் ராஜமாதா; அதாவது மேவார் மாமன்னர் கும்பாஜி மகாராணாவின் அன்னை. ஆனால் ராஜமாதாவின் கோபத்தைப் பற்றி அவள் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. மௌனமாகவே இருக்கிறாள். திவாதாரிகள் திரும்பி விடுகிறார்கள்.

தூரத்தில் பெண்களின் கூத்தாட்ட ஒலி கேட்கிறது.

ஆம், இன்று மதனத் திரியோதசி. காமவேளுக்கு விழாவெடுத்துச் சித்தோரின் ராஜபுதன நாரீமணிகள் அமர்க்களம் செய்கின்றனர்.

**அன்பனே, மலர் அம்பனே, வாழ்க!**
**மச்சக் கொடியோனே, மனம் பிளக்கும்**
**கொடியவனே வாழ்க!**
**சித்தர்கள் சித்தமும் சிதைந்திடும் சிங்கமே, வாழ்க!**
**அரி அயன் அரனையும் அமரர் குழாத்தையும்**
**ஆட்டிப் படைத்திடும் அனங்கனே, வாழ்க!**

உப்பரிகையில் தன்னந் தனியாக உலவிக் கொண்டிருந்த முகில் மூடிய மதியத்துக்கு இவர்கள் மதனனிடம் கோரும் வரம் அருவருப்பாக இருந்தது. காதுகளைப் பொத்திக் கொண்டாள் அவள்.

வெளி ஓசை அடங்கிற்று. ஆயின், அவளுக்கு உள்ளேயிருந்து குரல் கேட்கத் தொடங்கியது. நூறு நூறு ஆண்டுகளுக்குமுன் ஸ்ரீவில்லிப்புத்தூரில் பட்டர்பிரானின் இல்லத்தில் கோதை நாயகி எழுப்பிய குரல் அது. அவளும் மதனனிடம்தான் பிரார்த்தித்துக் கொண்டாள்.

**மானிடவர்க் கென்று பேச்சுப்படில்**
**வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!**

ஆண்டாள் பாக்கியசாலி! அவளை மானிடப் பிரேமைக்கு ஆட்படுத்தாமல் காத்தான் காமவேள். ஆனால் இவள்...

'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்ற சொற்கள், தீப்பொறிகள் போல் அவள் நாபியிலிருந்து குமுறிக் கொண்டு வெடித்துத் தேகம் முழுதும் வியாபித்தன. 'வாழகில்லேன்' என்று ஆண்டாள் பாடினாள். இவளோ மானிடனுக்குத் தாரமானபின் இன்னமும் வாழ்கிறாள். ஆனால் இதுவும் ஒரு வாழ்வுதானா?

காதைப் பொத்திக் கொண்டதாலும் அமைதி கிட்டிவிட வில்லை! செவியை அழுத்தியிருந்த விரல்களை எடுத்தாள். அடுத்த விநாடி ஆனந்தக் கடலில் ஆழ்ந்தாள்.

ஆகா, இதோ கேட்கும் குரல் — ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பழகிய குரல்— அழகிய குரல் — இது **அவனுடையது**தானே?

உப்பரிகையிலிருந்து எட்டிப் பார்த்தாள்.

ஒரே கணம்தான். அந்த ஒரு கணத்திலேயே, மாடத்துக்குக் கீழே நந்தவனத்திலே வந்து நிற்கும் பாலனைத் தேகத்தின் ஒவ்வொரு மயிர்க்காலும் கண்ணாகிவிட்டாற் போல் ஊன்றி ஊன்றி, ஊறி ஊறிப் பார்த்து விட்டாள்.

மங்கலான முன்னிரவிலும், நீல வெள்ளமாக நின்ற அந்தப் பிள்ளையின் உருவம் தெற்றெனத் தெரிந்தது. இது இருள் நீலமல்ல. அக்கினி ஜ்வாலையின் உச்சியில் பிரகாசிக்கும் ஒளி நீலம் இது. அவனது குழல் முடியில் கொத்துக் கொத்தாக மயில் தோகை. மயிலிடமேகூட இந்தத் தோகை இவ்வளவு இயல்பாகப் பொருந்தியதில்லை. இன்னும் ஏதேதோ காட்டுப் பூக்களையெல்லாம் வாரிப் போட்டுக் கொண்டிருக்கிறான். ஆகா, அவனது மெல்லிய செவிமூலத்தில் சொருகப்பட்டிருக்கிறதே, அந்தக் கர்ணிகார மலர் என்ன பாக்கியம் செய்ததோ? கழுத்து நிறையக் குன்றிமணி மாலை. துழாய் ஆரமும் அவனது நயமான திருமேனியைத் தழுவுகிறது. மாடுகளின் பின்னங்கால்களைச் சேர்த்துக் கட்டும் முரட்டுக் கயிற்றைத் தன் நுட்பமான இடையைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருக்கிறான். அதிலேயே பசுக்களை அழைக்கும் கொம்பையும், அவற்றைத் தட்டிக் கொடுக்கும் குச்சியையும் வேறு சொருகிக் கொண்டிருக்கிறான். போதாக் குறைக்குப் புல்லாங்குழல் வேறு! இதென்ன விந்தை! இந்தப் புல்லாங்குழலில் ஏன் இப்படித் துளசித் தழைகளை அடைத்து வைத்திருக்கிறது? இவையெல்லாம் சேர்ந்து அந்தக் கோமள சருமத்தை உறுத்துமே! இடையில் அன்னை ஆசையாகக் கட்டியுள்ள பட்டு வஸ்திரத்தின் தங்கக் கரைகூட அவன் உடம்பைக் கீறிவிட்டாற்போல் தோன்றுகிறது. பாதுகையும் அணியாத பாதம் பகலெல்லாம் நடந்து நடந்து எப்படி நொந்தனவோ?

பக்தி, ஞானம், யோகம் என்றெல்லாம் உயர்த்திப் பேசுகிறார்கள். ஆனால் இந்தக் குழந்தையோ உழைப்பின் பெருமைக்காக அல்லவா வந்திருக்கிறது? ராஜகுமாரனாக வளரக் கூடிய அவன் வனம் வனமாகக் கன்றுகளை மேய்த்து உழைப்பாக உழைக்கிறானே! மேய்ச்சலை முடித்துத் திரும்பும் இப்போது வாடித்தான் காண்கிறான். ஆயர் குலத்திடம் ஆயுள் உள்ளவரை (ஆயுள் தான் இவனுக்கு என்றுமுண்டே!) நன்றியுடன் இருக்க வேணும் என்பதற்காக, உப்புக் கரிக்க அவர்கள் வீட்டுச் சித்திரான்னங்களை யமுனைக் கரையில் தோழர்களுடன் கலந்துண்டுவிட்டு இப்போது வியர்த்து நிற்கிறான். பசுக்களின் குளம்புகளினின்று எழும் புழுதி அந்த வியர்வையில் படிந்து, சந்தனக் காப்புக்கு மேல் குளிர்ச்சியாக அவனுக்குப் பூச்சு அளித்திருக்கிறது. அந்தத் திருக்கோலத்தில் சகா ஒருவனின் தோள் மீது கையை மடித்து வைத்துக் கொண்டு சாய்ந்து நிற்கிறான்.

அச்...சோ! என்ன அழகு! இந்த மேனி அழகுகளையும், அணி அழகுகளையும் மட்டும் பார்த்தால் போதுமா? அந்த முகத்தின் எழிலை — நெற்றியை, கண்களை, நாசியை, அதரங்களை, கன்னங்களை, முகவாயை — ஜன்ம ஜன்மத்துக்கும் பார்க்க வேண்டாமா?

'வேண்டாம், வேண்டாம், பார்க்கவே வேண்டாம்!' அவளுடைய அதீத ஆனந்த அநுபவநிலையிலும் ராஜஸ்தான ஸ்திரீ தருமம் தானாகத் துருத்திக் கொண்டு அவளுடைய கைகளில் ஓடிற்று. தலையிலிருந்து நழுவியிருந்த முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டாள். அப்போது கண்களில் ஒரு மின்னல் வெட்டிற்று. மின்னலா? இல்லை. அவள் கையைத் தூக்கியபோது, அவளது நீண்ட மெல்லிய விரலில் அணிந்திருந்த மோதிரக் கற்களில் தீபத்தின் ஒளிபட்டு, வர்ண ஜாலத்தை எழுப்பியிருக்கிறது. ஆனால், அதுவே மின்வெட்டுக்கு மேலாக, வஜ்ராயுதத்துக்கு மேலாக அவளது இதயத்தில் பாய்ந்தது. 'கும்பாஜி' என்று வைரக் கற்களால் பொறிக்கப்பட்ட மோதிரம் அல்லவா அது?

ஆம், அவள் கும்பராணாவின் மனைவி! சாஸ்திர விதிப்படி, அக்கினி சாட்சியாக, பெரி

யோர்கள் முன்னிலையில் அவனோடு 'ஹாத் லேவா' செய்த கை இது!

பூகர்ப்பமே கொந்தளித்தது போல் நடு நடுங்கினாள் அவள். இமை, புல்வெளியில் நிற்கும் பிள்ளையின் கண்ணில் படக்கூடாது என்ற பதிவிரதா உணர்வுடன் ஸ்தம்பம் ஒன்றின் பின்புறத்தில் மறைந்து கொண்டாள். தன்னிடமிருந்தே விடுபட்டு எங்காவது ஒளிந்து கொள்ள வேண்டும் போல் இருந்தது அவளுக்கு. ஏனெனில், தூணின் பின் மறைந்து கொண்டபின்பும் அவளது மனம் இமையேதான் வட்டமிட்டது. அதை அவளால் அடக்க முடியவில்லை. மனம் காட்டிய வழியில் செவியும் ஓடிற்று. அதை அவளால் அடைக்க முடியவில்லை.

எப்படி முடியும்?

அவனுடைய குரல் கேட்கிறபோது செவிகளை யாரால் அடைத்துக் கொள்ள முடியும் ?

அவனேதான் பேசுகிறான்! தான் யார் தோள்மீது சாய்ந்து கொண்டிருக்கிறானோ, அந்தச் சகாவிடம் பேசுகிறான் !

''மதுமங்கள்! முத்தை இழைத்து நெய்தாற்போன்ற பாவாடையும், கஞ்சுளியும், துபட்டாவும் அணிந்து, சோகக் கடலில் பிறந்த ஒரு முத்துப் போல் இங்கே மாடத்தில் ஒரு பெண் நிற்கிறாளே, அவள் யார் தெரியுமோ?'' என்கிறான்.

''அதுதான் மேவார் மகாராணி'' என்று மதுமங்கள் மரியாதைதொனிக்கக் கூறுகிறான்.

மதுவாக இனிக்கும், மங்களமாகப் பொலியும் மோகனன் அமிருதக் கடலின் அலைகள் மோதுவது போல் சிரிக்கிறான்.

''மேவார் மகாராணியா? இல்லை; அவள் அன்றும் இன்றும், என்றும் மீராதான்..... மீ — ரா, மீ — ரா, மீ — ரா....''

மாடத்தில் மறைந்து நின்றிருந்த மீராவின் உடல் குப்பென்று சிலிர்த்தது: 'எவன் பெயரை உலகில் மாமுனிவர்களும் ஜபிக்கிறார்களோ, அவனே பேதை என் பெயரைச் சுவைத்துச் சுவைத்து, நீட்டி நீட்டித் தன் திவ்விய திருமுகத்தால் கூறுகிறான்! அந்தப் பெயருக்கே இப்போது எத்தகைய அழகும் தெளிவும் சோகமும் உண்டாகிவிட்டன!'

மீரா மீரா என்று அவன் மீண்டும் மீண்டும் கூறிய போதிலும் அவனிடம் ஓடாமல் தன் கால்களைக் கட்டுப்படுத்திக் கொண்டாள், கும்பராணாவின் கற்பரசி.

''கண்ணா, இதென்ன திரும்பத் திரும்ப இந்தப் பெயரையே பைத்தியம்போல் சொல்லிக் கொண்டிருக்கிறாய்?''

''மது! 'பைத்தியம் போல்' என்று சொல்லாதே! பைத்தியமேதான். ஞானியால் தான் ஞானம் தர முடியும், வித்வானால்தான் வித்தை தர முடியும், தனிகனால்தான் தனம் தர முடியும் என்றெல்லாம் உனக்குத் தெரியுமல்லவா ? அதே போல் பைத்தியம் பிடித்தவனால்தான் பிறருக்கும் பைத்தியத்தைத் தரமுடியும்.''

மதுவுக்குப் புரியவில்லை,

மாதவன் விளக்கினான். ''மீராவைப் பைத்தியமாக்கி யிருப்பவன் நான் தான் என்றால் என்னையும் பைத்தியம் என்றுதானே சொல்ல வேண்டும்?''

''மீராவை நீ பைத்தியமாக்கினாயா? நந்த குமாரா, எனக்குத் தெரியாத கதையாக இருக்கிறதே !''

''தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறாயா?''

''நிச்சயமாக!''

மீராவின் உயிர்ப் புறா இறகுகளைச் சடசடத்துக் கொண்டது. 'அவன் — சாட்சாத் அவனே — அபலையான என்னுடைய கதையைச் சொல்லப் போகிறான்!'

வெளியே ஒரு விநாடி மௌனம் நிலவியது.

சம்பகத்தின் மணமும் சமேலியின் மணமும் வெகு தீவிரமாக அந்த ஒரு விநாடியில் பாய்ந்து வந்தன.

'தப்பள தளபள' என்று ஒரு சப்தம் வந்தது.

அது என்ன சப்தம் என்று மீரா ஊகித்தறிந்தாள்.

## ஆண்டவன் பணியோடு அடியார் பணி

பிரவசனத்தில் பீஷ்ம பிதாமகராக விளங்குபவரும் புண்ணியாத்மாவுமான மாயூரம் பிரம்மஸ்ரீ சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள், மன்னார்குடிக்கு அருகேயுள்ள தேவன்குடி இந்திரபுரீசுவர ஆலயத் திருப்பணிக்காகத் தமது தள்ளாத தசையிலும் அயராது உழைத்து வருவதை அன்பர்கள் அறிவர். ஆஸ்திகர்களின் ஆதரவில் ஆலயத் திருப்பணி முற்றிலும் பூர்த்தியாகிவிட்டது. ஆயினும் மகா கும்பாபிஷேக வைபவத்துக்காகச் சுமார் ஐயாயிரம் ரூபாய் நிதியம் தேவைப்படுகிறது. இச்சமயத்தில் பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் மிகவும் துர்ப்பலமாகி நோயுற்றிருப்பது பணியின் அவசியத்துக்கு மேலும் அவசரம் ஊட்டியுள்ளது. சாஸ்திரிகள் ஜீவியவந்தர்களாக உள்ள போதே கும்பாபிஷேகத்துக்குத் தேவைப்படும் திரவியம் திரளுவதற்கு உடனடியாக உதவி புரிந்து, பகவான் பணியோடு பாகவதோத்தமரின் பணியையும் புரிகிற பாக்கியத்தை ஆஸ்திகருலகம் அடைய வேணும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: **Dr. Srinivasan, 16, Vallalar Koil Double Street, Mayuram, Tanjore Dt.**

ஆடாமல் அசையாமல் நின்ற அந்தப்புரத் தடாகத்தில் அவன் கால்களை வைத்து அடிக்கிறான்.

'தடாகப் படிக்கட்டில் அமர்ந்து கொண்டு காலை நீருக்குள் விட்டுக் கொண்டிருக்கிறான் போலும்! அலைந்து அலுத்த அவனது பாதங்களின் ஆயாசத்தைத் தீர்க்கும் அந்த அலைகள் செய்த பாக்கியத்தை என்னென்பது ?'

தடாகக் கரையில் தோழனுடன் அமர்ந்து கொண்டு, அலையொலியைப் பழிக்கும் குரலில் அவன் அவனுடைய கதையைச் சொல்லத் தொடங்கினான்.

ஃ ஃ ஃ

மேர்தா கண்ட மாவீரர்களில் ஒருவர் ராவ்தூதா. மண்டோரில் தளபதியாக இருந்த அவர் தமது பராக்கிரமத்தால் மேர்தாவை ஒரு தனி ராஜ்யமாக ஸ்தாபித்தார். சிறிய ராஜ்யம்தான் அது. எனினும், ராஜஸ்தானத்திலிருந்த பெரிய அரசுகளுக்கு அடிமையாக இராமல் சுதந்திரமாக இருந்தது.

தூதாவின் முதல் மூன்று மக்களான மல்தேவ், ராய்மல், வீர்சிங் ஆகியோர் தந்தைக்கேற்ற தனயர்களாக, வீரதிலகங்களாக விளங்கினார்கள். கடைசிப் புதல்வன் ரத்தன்சிங் மட்டும் சற்றே மாறுபட்ட ஒரு பிறவி. போர்க்களத்தைவிட 'டாகூர் த்வார்' தான் அவனுக்கு அதிகம் பிடித்திருந்தது. 'டாகூர் த்வார்' என்பது கிருஷ்ண பரமாத்மாவின் ஆலயம்.

ரத்தன்சிங் ஊரோடு இருந்து நிர்வகித்து வந்ததால் இவனையே அரசனாகக் கருதி 'ரஜ்தோர்' என்று மக்கள் அழைத்து வந்தனர்.

தந்தையும் மூத்த சகோதரர்களும் ரணகளங்களில் தங்கள் புயவலியைக் காட்டிவரும் போது ரத்தன்சிங் மேர்தாவிலேயே தங்கியிருந்து டாகூர் த்வாரத்தில் பூஜைகள், பஜனைகள், பிரவசனங்கள் நடத்தி வைப்பதில் ஈடுபட்டிருப்பான்.

ஃ ஃ ஃ

இப்போது அந்தக் காலத்தின் சமய நிலையைச் சற்றே அறிய வேண்டியது அவசியம்.

பதினைந்தாம் நூற்றாண்டும், பதினாறாம் நூற்றாண்டும் கிருஷ்ணபக்தி வரலாற்றில் பொன்னேடுகளாகும்.

ஏறக்குறைய ஒரே காலத்தில் இந்தியாவின் பல திசைகளில் பல மகாபுருஷர்கள் தோன்றிக் கண்ணனன்பைக் கனியச் செய்த காலம் அது. ஸ்ரீ கிருஷ்ணசைதன்யரில் தொடங்கி ஒரு பாகவத மதம் உருவாகத் தொடங்கியிருந்தது. அன்பு, சங்கீதம் இரண்டையுமே இரு கண்களாகக் கொண்ட அற்புத மதம் அது. பஜனையும், சங்கீர்த்தனமும், தீர்த்தாடனமும், க்ஷேத்திராடனமும் செய்து வந்த கோஸ்வாமிகள் பலர் இந்தச் சமயத்தைத் தழைக்கச் செய்தார்கள். இதன் வித்து தமிழகத்தில் தோன்றியதே என்பதில் நாம் பெருமை கொள்ளலாம். ஸ்ரீ ராமாநுஜாசாரியரின் சீடரான ஸ்வாமி ராமானந்தர் தான் வட இந்தியாவில் இந்தப் பக்தி வெள்ளத்துக்கு ஆதாரச் சுனையை அகழ்ந்து தந்தார். ஆனால் இதில் அத்வைத—விசிஷ்டாத்வைத பேதங்கள் இல்லை என்பதையும் நாம் மறந்து விடுவதற்கில்லை. கண்ணபெருமானைப் பரம லளிதமான துதிகளால் போற்றிய ஆதிசங்கரரின் அத்வைத மரபில் ஊறி, 'அத்வைத ஸித்தி' முதலிய பிரமாண நூல்களைத் தந்த ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி அவர்களும் கிருஷ்ண பக்தியைப் பெருக்கெடுக்கச் செய்தார். கிழக்கே வங்காளத்தில் மதுசூதனரும், உத்தர பாரதத்தில் பரம பாகவதரான கபீர்தாஸரும், மேற்கே கூர்ஜரத்தில் கிருஷ்ண பக்தியையே மோக்ஷ மார்க்கமாக்கித் தந்த வல்லபாசாரியரும், தெற்கே காதுக்குப் பொன்னாக — கர்ண ஆபரணமாக — கர்நாடக சங்கீதத்தின் வேரிலேயே கிருஷ்ண பக்தி என்ற நீரைப் பாய்ச்சி வளர்த்த புரந்தரதாஸரும் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு இடைவெளியிலேயே அவதரித்தவர்கள் என்பது ஓர் அதிசயம். தமிழகம் மட்டில் இதற்குப் பின்தங்கி விட்டதா என்று எண்ண வேண்டாம். பாரதத்தின் இதர பகுதிகள்தான் தமிழகத்துக்குப் பின்தங்கி விட்டன. ஆழ்வாராதிகளின் காலத்திலிருந்தே இங்கு கிருஷ்ணப் பிரேமை செழிப்பாக வளரத் தொடங்கி விட்டது. அது பல நூற்றாண்டுகளில் ஒரு நெடிய தருவாக ஓங்கி விட்டது. வித்து முளைத்துச் செடியாகும் வரையில் தினந்தோறும் அதன் வளர்ச்சியைக் கண்களால் காண முடியும். 'ஆகா, என்ன வளர்ச்சி!' என்று வியப்போம். ஆனால் விருட்சமாகி முதிர்ந்துவிட்டபின் வளர்ச்சியைப் பார்க்க முடியாது. மௌனமாக அது எவ்வளவோ அதிசயங்களைச் செய்து வந்த போதிலும், 'நேற்று இருந்த விருட்சமேதான் இன்றும் இருக்கிறது' என்று நினைப்போம். பாரதத்தின் பிற பகுதிகளில் கிருஷ்ணபக்தி சிறிய கன்றாக, கண்ணுக்கு வெளிச்சமாக, வளர்ந்து வரும்போது, தமிழகத்தில் அது தருவாக நின்று மௌனமாய்ப் பழங்களைத் தந்து கொண்டிருந்தது.

காவிரியின் மத்தியில் கோதைநாயகி இடம் கொண்டாற்போல் இந்த அன்பு யுகத்தின் மத்தியில்தான் மீராவின் ஜனனம் நிகழ்ந்தது.

ஆனால் இரண்டாற்றின் இடை மீரா அவதரிக்கவில்லை. ராஜஸ்தானத்தில் ஒருபுறம் கடும் பாறையாக உறையும் அராவலா என்கிற அரவல்லி மலைத்தொடரும், மறுபுறம் பாலைவனமும் சூழ்ந்த கட்டாந்தரைப் பகுதியான மேர்தாவில் பிறந்தாள். அதிலும் ஒரு பொருத்தமுண்டு. பாறுங்கல்லைப் போன்ற திண்மை பெற்றவர்கள் ராஜபுதன மக்கள். வீர உணர்ச்சிக்கு அவர்கள் தந்த முக்கியத்துவத்தால் இதர உணர்ச்சிகளெல்லாம் வறண்டு பாலைவனமாகி விடுவதும் உண்டு. பாலைவனத்தில் ஒரு சோலைவனமாக மீரா வந்து உதித்தாள்.

மேர்தாவில் பூமியை நன்கு அகழ்ந்தால் தான் நீர் கிடைக்கும். களிமண் பாங்கான அடிப் பகுதிகளில் ஊறி வரும் அந்த நீர்

குசியாகவும் இராது. இதைக் கண்டு, ராவ்தூதா மேர்தாவின் சுற்றுப் பகுதிகளைத் தேடித் தேடிப் பார்த்து ஓர் ஏரியை வெட்டினார். தூதா ஸர் (தூதா சரஸ்) என்று அதைச் சொல்வார்கள். அதிலிருந்து முதற் கும்பநீர் முகர்ந்து டாகூருக்கு ரத்தன்சிங் அபிஷேகித்த அன்றே —

உள் வறட்சியைத் தீர்க்கும் ஒரு பொய்கையாக, அவன் மனைவி சந்திரமுகி மீராவைப் பெற்றெடுத்தாள்.

பெண்களுக்கு மரியாதை செய்வதில் ராஜபுதனத்துக்கு ஈடு இணை கிடையாது. எனினும் 'பெண் குழந்தை' என்றால் வீர ராஜபுத்திரர்களுக்கு ஒரு கசப்பு. போர்க்களத்தில் வாளேந்தவும், வில் எய்யவும் இரு கரங்களைத்தான் அவர்கள் எதிர் பார்த்தார்கள். ஆயினும் ரத்தன்சிங்குக்கு மட்டும் தன் அருமைப் பெண்ணைப் பார்த்தவுடன் உள்ளம் புளகித்தது. அல்லித்தண்டு போன்ற அவ்விரு கரங்கள் வாளையும் வில்லையும் ஏந்தப் போவதில்லை, தம்புராவையும் சிப்ளாக் கட்டையையுமே ஏந்தப் பிறந்தவை என்று அவனுடைய உள்ளுணர்வு கூறியது.

குழந்தையின் எழிலைப் பலர் பலவிதமாகப் புகழ்ந்தார்கள். ஆனால் சந்திரமுகியோ அதன் நெற்றியையே பார்த்துப் பார்த்து விம்மிதம் அடைந்தாள். 'நயனங்களையோ, நாசியையோ, வாயையோ, கை கால்களையோ அழகு பார்ப்பதில் பொருள் உண்டு. அவற்றில் ஒரு வளைவு, நெளிவு இவை இருக்கும். நெற்றியில் என்ன அழகைக் காண முடியும்? அதில் என்ன ஏற்றமா, இறக்கமா?' என எண்ணலாம். இதெல்லாம் இல்லாததாலேயே அதற்கு விசேஷ அழகு. ஒரே சமமாகப் பரவி யிருப்பதாலேயே நெற்றியைப் பார்க்கும்தோறும் மனத்துக்கு ஓர் அமைதி. குழந்தையின் முன்னுச்சிக் கேசங்களை விலக்கி விட்டு, அதன் நெற்றியின் விஸ்தாரத்தைப் பார்த்துப் பார்த்து உவகை பூத்தாள் சந்திரமுகி. கரும்பு வில் போன்ற அதன் அழகிய நீண்ட இரு கரும் புருவங்களிடையே உள்ள மத்தியப் பிரதேசத்தைப் பார்க்கும் போது அனந்த வாழ்வுக்கு அது ஒரு வாசல் போலத் தோன்றும். இரு கண்கள் மட்டுமின்றி, மூன்றாவதான ஞானக் கண்ணும் சேருகிற அப் புருவ மத்தி கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் கலக்கும் திரிவேணி போல் பாவனமாக இருந்தது. அதில் நீராடியது சந்திரமுகியின் நயனம்.

பன்னிரண்டாம் நாள் குழந்தைக்குப் பெயர் சூட்டும் திருவிழா.

ராஜகுருவைத் தகுந்த பெயர் கேட்டுக் கொண்டிருந்தான் ரத்தன் சிங்.

அவர் நட்சத்திரத்தை வைத்துக் கணக்குச் செய்ய ஆரம்பித்தார்.

அதே போதில், யமுனா தீரத்தில் நட்சத்திரத்தைக் கண்டு புனித ஜீவன் ஒன்றின் உதயத்தை அறிந்த ரூபகோஸ்வாமியும் மேர்தா வந்து சேர்ந்தார்.

அன்பின் எல்லையை, இசையின் எல்லையை, இன்பத்தின் எல்லையைக் குழந்தையிடம் கண்டார் அவர்.



"மீரா" என்று பெயரிடுங்கள்" என்றார்.

'மீரம்' என்றால் எல்லை என்று பொருள். கடல் என்றும் ஒரு பொருள்.

ஃ ஃ ஃ

மதுமங்களன் கண்ணனின் முகத்தை நோக்கினான். 'ஏன் கதையை நிறுத்தி விட்டான்? எப்போது மீண்டும் வாய் திறப்பான்?' என்று ஆவலுடன் பார்த்தான்.

கண்ணனின் வாய் திறந்துதான் இருந்தது. அவனது அதரங்களும் அசையத்தான் செய்தன. மிகவும் மெல்லிய இரகசியக் குரலில், "மீரா, மீரா" என்று உச்சரித்துக் கொண்டிருந்தான்.

உப்பரிகையில் தூணின்பின் மறைந்து நின்ற மீராவின் காதுகளில் அந்தச் சப்தம் விழ நியாயமில்லை. ஆனாலும் அவளுடைய நரம்புகள் அத்தனையையும் மீட்டிவிட்டாற் போல் அந்தப் பெயரே அவளது மேனி முழுதும் வியாபித்தது. மேனியையும் பீறிக் கொண்டு அந்த நாதம் வெளிப்படும் போன்ற உச்சகட்டத்தை அடைந்த போது, —

இதோ, கண்ணன் மீண்டும் கதையைத் தொடங்கினான்.

ஃ ஃ ஃ

குழந்தைக்குப் பெயர் சூட்டியவுடன் இளையராணி சந்திரமுகி தேவி, தானே அதனை மார்போடு அணைத்துக் கொண்டு கணவனுடன் டாகூர் துவாரத்துக்குச் சென்றாள். என்ன தோன்றியதோ, கண்ணனின் பிரதிமைக்கு அடியிலேயே குழந்தையை வைத்துவிட்டாள்.

குழந்தை 'குவா குவா' என்று அழுதது.

ஆனால் சாதாரணமாக எல்லாக் குழந்தைகளும் அழுகிற அழுகை அல்ல அது. வாழ் நாள் முழுதும் இந்தக் குழந்தையின் அழுகை ஓயப் போவதில்லை. கண்ணனைக் காண்பதற்காகக் குமுறி அழும் அழுகையாக, அவனைக் கண்டவுடன் ஆனந்தத்தில் கண்ணீர் விடும் அழுகையாக, உலகத்தின் இன்னல்களை அநுபவித்துக் கதறும் கதறலாக, உலகத்தோர் இதுவரை காணாத துயரங்களை ஏற்று அலறும் அலறலாக அந்த அழுகையே சாசுவதமாக நீடிக்கப் போகிறது.

தன் பாதத்தில் வந்து கிடந்த பசுந்தளிர்க் குழந்தைக்குப் பொல்லாத கண்ணன் இதைத்தான் பரிசாக வைத்திருந்தான் போலும்!

ஃ ஃ ஃ

மதுமங்கள் குறுக்கிட்டான். "ஸ்யாம்! நீ தானே அந்தக் கண்ணன்? ஏன் யாரோ மூன்றும் மனிதரைச் சொல்வதைப் போலப் பேசுகிறாய்?" என்று கேட்டான்.

கண்ணன் இளநகை புரிந்தான். "அர்ஜுனனிடம் 'நான் நான்' என்று சொல்லிக் கொண்டு என் பிரபாவங்களைக் கூறிவிட்டேன். நீ அர்ஜுனனில்லை. மதுமங்கள் அல்லவா? அதனால் இப்படித்தான் சொல்லவேண்டும்" என்று கூறி, விட்ட இடத்தில் மீண்டும் கதையை எடுத்துக் கொண்டான். (தொடரும்)



# எனக்கு என்னதான் வந்து விட்டது?

எனக்கு எப்பொழுதும் ஒரே சோர்வு. எதற்கெடுத்தாலும் எரிச்சலும் சிடுசிடுப்புமாய் இருந்தேன். அக்கம்பக்கத்தவர்கள் கூட என்னிடமிருந்து ஒதுங்கியே இருந்தார்கள்!

எங்கள் டாக்டர் என் சோர்வைப் போக்க வழி சொன்னார். சரியான போஷாக்கின்மைதான் சக்திக் குறைவுக்கு காரணம் என்றார். ஹார்லிக்ஸ் அருந்தும்படி சொன்னார்.






ஹார்லிக்ஸ் விரைவிலேயே எனக்கு சக்தியளித்தது! அதோடு என் பழைய தெம்பும் திரும்பியது. ஹார்லிக்ஸ் என் வாழ்க்கையை மீண்டும் மகிழ்ச்சிகரமாக்கியது!

குறைந்த போஷாக்கின் காரணமாக சோர்வு ஏற்பட்டால் ஹார்லிக்ஸ் பருகும்படி டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள். ஆடைச்சத்து மிகுந்த பால், கோதுமை மாவு, மால்ட்டட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்துக்களை கொண்டுள்ள ஹார்லிக்ஸ் விரைவிலேயே புதிய சக்தியை அளிக்கிறது. ஹார்லிக்ஸ் பருகுவதற்கு சுவையானது... பலனளிப்பதில் [illegible]. அது உங்களுக்கும் நிச்சயமாகப் பலனளிக்கும்!




**ஹார்லிக்ஸ்**

*அதிக சக்தி யளிக்கிறது!*






ஒரு காட்சி :

சென்னை மவுண்ட்ரோடில் ஓங்கி உயர்ந்து நிற்கும் 'தன் பில்டிங்'கின் ஐந்தாவது மாடி. ஓர் அலுவலகப் பகுதி.

மும்முரமாக வேலை செய்து கொண்டிருக்கும் ஓர் ஊழியரிடம் பியூன் ஒருவன் வந்து, ''முதலியார் உங்களைக் கூப்பிடுகிறார்'' என்று கூறிவிட்டுப் போகிறான். அந்த ஊழியர் பரபரப்புடன் முதலாளியின் அறைக்குப் போய் விட்டுச் சற்று நேரத்தில் திரும்பி வருகிறார். வந்தவர் இன்னொருவரை அழைத்து, ''உங்களை நாளை மெயிலில் புறப்பட்டுக் கல்கத்தாவுக்குப் போகச் சொன்னார். டிக்கெட்டுக்கு இப்போதே ஏற்பாடு செய்து விடுகிறேன்....!'' என்று தகவல் தெரிவிக்கிறார். அதற்குள் 'உள்ளே'யிருந்து இன்னொரு முறை அழைப்பு வந்து விடுகிறது. இரண்டாம் முறை உள்ளே போகிறவர், திரும்பி வரும் போது சிரித்துக் கொண்டே வருகிறார். ''உங்களுக்கு 'லோயர் பர்த்'தையே 'புக்' செய்யச் சொன்னார் முதலியார்..... 'அப்பர் பர்த்' என்றால் உங்களுக்குச் சரிப்பட்டு வராதாமே?'' என்கிறார். கல்கத்தா போகப் போகிற ஊழியர் 'உண்மைதான்' என்கிற பாவனையில் தலையாட்டுகிறார்.

இன்னொரு காட்சி:

அமெரிக்கத் தொழில் கூட்டுறவுடன் இங்கே ஒரு நிறுவனம் தொடங்கப்பட்டிருக்கிறது. ஒப்பந்தப்படி அமெரிக்க ஸ்தாபனம் இந்தக் கூட்டு நிறுவனத்துக்குப் பல லட்சம் பெறுமானமுள்ள ஓர் இயந்திரத்தை அனுப்பி வைக்க வேண்டும். ஆனால் அவர்கள் அனுப்பி வைத்ததோ, இவர்களுக்குத் தேவைப்படாத ஓர் இயந்திரத்தை. அதைத் திருப்பி அனுப்புவதிலும் ஒரு சங்கடம். 'ஏற்றுக் கொள்ள மாட்டோம்' என்று பயமுறுத்துகிறார்கள் அமெரிக்காவிலிருந்து. இந்தப் பிரச்னையை எப்படிச் சமாளிப்பது? ''நீங்கள் உடனே புறப்பட்டு பம்பாய்க்கு வந்தீர்களானால் அமெரிக்கப் பிரதிநிதிகளைச் சந்தித்துப் பேசலாம். உங்களைக் கண்டால்தான் அவர்களுக்குப் பயம். நீங்கள் சொன்னால் அவர்கள் கட்டாயம் கேட்பார்கள். எனவே, உடனே புறப்பட்டு வரவும்'' என்று தந்தி மேல் தந்தியும் 'டிரங்க் கா லு'மாகச் சென்னைத் தொழிலதிபர் ஒருவருக்கு வந்து சேருகின்றன.

''இப்படி (1) தமது ஊழியர்களின் விருப்பு வெறுப்புக்களைத் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பவரும் (2) அயல்நாட்டவர் என்பதற்காக அசந்துவிடாமல் நியாயத்துக்குப் போராடுபவருமான தொழிலதிபர் யார்?

விடை: திரு சி. எஸ். லோகநாதன் அவர்கள்.

தோற்றத்திலே கம்பீரம், நடையிலே நிதானம், பார்வையிலே மிடுக்கு, பேச்சிலே எளிமை — இவற்றின் சேர்க்கைதான் திரு லோகநாதன். பதினைந்துக்கும் மேற்பட்ட தொழில் நிறுவனங்களில் டைரக்டர் குழுத் தலைவராகவும், டைரக்டராகவும் இருப்பதுடன் வேறுபல பொதுநல ஸ்தாபனங்களிலும் அங்கம் வகிக்கும் இந்தப் பிரமுகர் பொன்னேரி தாலுகாவிலிருந்து கிடைத்துள்ள ஒரு புதையல்.

1922ம் ஆண்டில் படிப்பை (இண்டர்மீடியட்: பச்சையப்பன் கல்லூரி, சென்னை) முடித்துவிட்டு வியாபாரத்தில் குதித்த போது மற்ற பலரைப் போல இவருக்கு அடி கிடி எதுவும் படவில்லை. மிகவும் முன் யோசனையுடன்தான் வைக்கோல் வியாபாரத்தில் போய்க் குதித்தார். பெரம்பூரில் அப்போது இருந்த அரசாங்க ஸீரம் இன்ஸ்டிடியூட்டுக்கு வைக்கோல் 'சப்ளை' செய்ய ஆரம்பித்தவர், நாளடைவில் தோல் வியாபாரத் துறையிலும் புகுந்து தமது திறமைக்குப் 'பாலிஷ்' ஏற்றிக் கொண்டார்.

'பாலை பிடித்தவன் பாக்கியசாலி' என்ற பழமொழியை நம்பாதவர் திரு லோகநாதன். அவரைப் பொறுத்தவரையில் 'பார்ட்னர் கிடைத்தவன் பாக்கியசாலி' என்ற புது மொழியைத்தான் உருவாக்க வேண்டும். உண்மையும் அதுதான். திரு. ஜே. எச். தாராப்பூர் அவர்களுடன் கூட்டுச் சேர்ந்து கட்டுமான வேலைக் 'காண்ட்ராக்டி'ல் ஈடுபட்டது இவரது வாழ்வில் ஒரு திரும்பு முனையாக அமைந்ததுடன், வர்த்தக உலகின் உச்சாணிக் கிளைக்கு இவரை உயர்த்தக்கூடிய ஒரு சாதனமாகவும் அமைந்தது.

சர் சி. பி., திருவாங்கூர் சமஸ்தானத்தில் திவானாக இருந்தபோது போட்ட கன்னியாகுமரி — திருவனந்தபுரம் கான்கிரீட் சாலை முதல் இன்றைக்குப் புதிய பாரதத்தின் சிறப்புச் சின்னங்களாகத் திகழும் ரூர்கேலா எஃகு ஆலை, ஹீராகுட் அணை, ஷராவதி மின்விசைத் திட்டம் ஆகியவை வரை பல நிறுவனங்கள் தாராப்பூர் கம்பெனியின் திறமைக்கும் சாதனைக்கும் சான்று கூறிக் கொண்டிருக்கின்றன. இப்போது ஃபராக்கா அணை சம்பந்தமான வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள் இவர்கள். இந்த ஒரு வேலையின் மதிப்பு மட்டும் எட்டுக் கோடி ரூபாய்!

சிமெண்ட், இரும்புக் குழாய், பருத்தி நூல், சர்க்கரை, ஆட்டா—சூஜி, ரேயான்,

கார்பன் மானுக்ஸைட், பாலிவினைல் குளோரைடு, எவர்சில்வர் — இத்தனை பொருள்களுக்கும் பொதுவான ஓர் அம்சம் என்ன தெரியுமா? திரு லோகநாதன் அவர்கள்தான். அவர் ஒருவர்தான் மேற்படி பொருள்களையெல்லாம் தயாரிக்கும் கம்பெனிகளில் பொறுப்பேற்றிருக்கிறார், பங்குதாரராக மட்டுமின்றி, டைரக்டர் என்ற முறையிலும். "புதிதாக எந்த ஒரு தொழில் நிறுவனம் தொடங்குவதாக இருந்தாலும் பணத்தைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. திரு சி. எஸ். லோகநாதன் இந்தக் கம்பெனியிலே ஒரு டைரக்டர் என்று அறிவித்து விட்டால் போதும். பங்குகள் 'மளமள'வென்று பறந்து போய்விடும்!" என்று தொழிலதிபர்களே கூறுமளவுக்குப் பங்கு மார்க்கெட்டிலும், வர்த்தக உலகிலும் நற்பெயர் பெற்றிருக்கும் திரு லோகநாதன் — இதுவரை யார் போய் எந்தத் தொழில் ஆரம்பிப்பதாகக் கூறி உதவி கோரினாலும் செய்து வந்தவர்—இப்போது சற்றுத் தயங்குகிறார். காரணம், உதவி செய்ய அவருக்கு விருப்பமில்லை என்பதல்ல. 'யாரும் இருபது கம்பெனிகளுக்கு மேல் டைரக்டராக இருக்கக் கூடாது என்று அரசாங்கம் விதித்திருக்கும் கட்டுப்பாடுதான் அவரது கையைப் பின்னுக்கு இழுக்கிறது.

'நான் பரீட்சையில் காப்பி அடித்திருக்கிறேன். ஆனால் அந்த உண்மையை ஒப்புக் கொள்ளவும் செய்வேன்' என்று ஒளிவு மறைவின்றித் தெரிவிக்கும் இவர் ஆறு கல்வி நிலைய நிர்வாகக் குழுக்களில் அங்கம் வகிக்கிறார். இந்தியா சிமெண்ட்ஸ் திரு டி.எஸ். நாராயணசாமியுடன் சேர்ந்து பொன்னேரியில் தொடங்கியிருக்கும் கலைக் கல்லூரியும், திரு தாராப்பூர் அவர்களின் கூட்டுறவுடன் அயனாவரத்தில் தொடங்கியிருக்கும் பெண்கள் பள்ளியும் அவற்றில் இரண்டு. இவை போதாவென்று புற்றுநோய் ஆராய்ச்சிக்கென 'டிரஸ்ட்' ஒன்றையும் நிறுவி, ஆராய்ச்சித் துறையில் ஈடுபடுகிறவர்களை ஊக்குவித்தும் வருகிறார். இந்த ஒன்றுக்கு மட்டும் ஆண்டுதோறும் செலவிடப்படும் தொகை: பதினெட்டாயிரம் ரூபாய்.

இங்கிருந்து மேல்நாட்டுக்குப் போகிறவர்களில் சிலர், நம் நாட்டின் பெருமை, புகழ் எல்லாவற்றையும் கப்பலேற்றிவிட்டு, ஊர் திரும்புவது வழக்கம். திரு லோகநாதனும் மேற்கு ஜெர்மனிக்குப் போய், சென்னை பெருமை, ஐயம், புகழ் எல்லாவற்றையும் கடலில் தள்ளி விட்டு வந்திருந்தாலும் அது குறித்து நாம் பெருமைப்பட வேண்டியதே தவிர, வருத்தப்படத் தேவையில்லை. காரணம், அவர் கடலில் தள்ளி விட்டவை (சென்னை ஐயம், சென்னைப் பெருமை, சென்னைப் புகழ்) அவர் தலைமை தாங்கும் தென் இந்தியக் கப்பல் கம்பெனிக்குச் சொந்தமான பிரும்மாண்டமான கப்பல்களைத்தான். 'வ. உ. சி.யின் அடியொட்டிச் செல்பவர்' என்ற அடைமொழிக்கு இவர் எல்லாவிதத்திலும் தகுதியானவர்தான் என்ற எண்ணமே தோன்றுகிறதல்லவா?

அரும் பெரும் காரியங்களை யெல்லாம் சாதித்து விட்டிருக்கும் இவர் எதையுமே 'நான் செய்தேன்' என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொள்வதில்லை. சுபாவத்திலேயே ஊறிப் போயிருக்கும் தன்னடக்கமும், கடவுளிடம் இவர் வைத்திருக்கும் அபார நம்பிக்கையுமே இதற்குக் காரணங்கள் என்றுதான் கூறவேண்டும்.

மாலை வேளைகளில் காஸ்மாபாலிடன் கிளப்பில் ஆஜராகத் தவறாத இவர், நீதிபதிகள்தான் அங்கே தலைவராக இருக்க முடியும் என்ற சம்பிரதாயத்தை உடைத்தெறிந்து மூன்று தடவைகள் தாமே தலைவர் ஸ்தானத்தை அலங்கரித்திருக்கிறார்.

பரம்பரைப் பணக்காரர்கள் முதற்கொண்டு, புதுப் பணக்காரர்கள்வரை தங்கள் வீட்டுத் திருமணங்களைத் தடபுடலாகக் கொண்டாடத் தேர்ந்தெடுக்கும் 'அப்பட்ஸ்பரி' மாளிகையின் உரிமையாளர் திரு லோகநாதன்தான்.

இவருக்குக் கோபம் வருமோ?

எப்போதாவது வரும் — யாராவது பியூன் அடிக்கடி லீவு போட்டானானால் 'பிடி சம்பளத்தை!' என்று உத்தரவு போடுவார். அப்புறம் அந்த ஆசாமியே அவரை நேரில் போய்ப் பார்த்துச் 'சம்பளத்தைப் பிடிக்காதே, ஐயா!' என்று கேட்டுக் கொண்டானானால் மறு உத்தரவு போடுவதோடு, அவன் கையிலே ஐந்தோ, பத்தோ கொடுத்தனுப்புவதும் வழக்கம்!

"உங்களுடைய ஆசை என்ன?"

"என்னிடம் என்னவோ இத்தனை பேர்கள் வேலை செய்கிறார்கள் என்று நினைத்துப் பெருமைப்படுகிறேன்... ஆனால் இதைப் போல் லட்சம் மடங்கு ஆசாமிகளைப் படைத்துக் காத்து ஆட்டி அலைக்கழிக்கிறானே, அந்த ஒருத்தனைப் பார்க்க வேண்டும் என்பதுதான் என்னுடைய ஒரே ஆசை" என்று உருக்கத்தோடு கூறினார் இந்தத் தொழிலதிபர்.

முதற் பார்வைக்கு இவர் கோபக்காரர் போலக் காட்சியளிக்கிறாரே, அதன் காரணம் என்ன?

"அவர் ராசி சிம்மராசி சார்!..." என்று ரகசியத்தை உடைத்தெறிந்தார் ஒருவர்!

— முகுந்தன்

**பக் பக் மாடப்புறா**



புறா என்ற ஒரு பறவைதான் தண்ணீரைத் தலை குனிந்து உறிஞ்சிக் குடிக்கும் வல்லமை உள்ளது. மற்றப் பறவைகள் எல்லாம் தண்ணீரை வாயில் எடுத்துக் கொண்டு, அதை விழுங்க நிமிர்ந்தால் தான் குடிக்க முடியும்.

— மாலி

## ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும்

## உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன

ஜேய் அழகு சாதன சோப் சரும துவாரங்கள் அனைத்தையும் சுத்தப்படுத்தி, சருமத்தை மிருதுவாக்குகிறது. ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும் உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன. பளபளக்கும் ரேக்கு 'ராப்ப'ரின் காரணமாக அதில் அடங்கியுள்ள மனோகர மல்லிகை நறுமணம் நிலைத்து வீசுகிறது.




டாடா தயாரிப்பு

உங்கள் எழில் பெருக

# ஜேய்

அழகு சாதன சோப்

Bensons/TTJS-107-Tam.

# முள்ளும் மலரும்



## அத்தியாயம் 6

“எனக்கு வலி பொறுக்கல்லே. ‘யோவ், கையை விடய்யா, வலி பொறுக்க முடியலே!’ அப்படின்னு கத்திக் கையை உதறிக்கிட்டு எழுந்திட்டேன்.''— இவ்வாறு கூறிய மங்கா வள்ளி நின்ற நிலையைப் பார்த்து விட்டு. ''என்ன அக்கா, திடீர்னு யோசனை செய்ய ஆரம்பிச்சுட்டியே!'' என்று அவள் தோளைப் பிடித்து உலுக்கினாள்.

சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்ட வள்ளி, ''ஒண்ணுமில்லே மங்கா, மேலே சொல்லு. அப்புறம் என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

''அப்புறம் என்ன! உங்க அண்ணனுக்கு மறுபடியும் மொறைப்பு வந்திடுச்சி. ‘கடிகாரத்தைக் குடுக்கறயா இல்லையா?’ அப்படின்னு கத்திச்சு. ‘உன் கடிகாரம் யாருக்கய்யா வேணும்! நீயே வைச்சிக்க’ அப்படின்னு நானும் பதிலுக்குக் கத்திக் கடிகாரத்தைக் கழட்டிக் குடுத்திட்டு மேம்பாறைக் கசத்தைப் பார்க்க நடந்திட்டேன்.''

''ஏன் மங்கா? கசத்திலே எறங்கிக் குளிச்சயா என்ன?''

''நீ ஒண்ணு, நீச்சல் அடிக்கத் தெரியாமே கசத்திலே எறங்கிட முடியுமா? மேம்பாறையிலே உக்காந்து கசத்துத்

உமாசந்திரன்

தண்ணியைப் பார்த்துக்கிட்டிருந்தாலே போதுமே. கண்ணாடி மாதிரித் தண்ணி, 'அடிமணல்கூடப் பளிச் சென்று தெரியும். எறங்கினா இடுப்பளவு தண்ணி தான் இருக்கறாப்பலே தோணும். ஆனால் நாலு ஆள் ஆழமாச்சே அது.''

''தெரியுமில்லே?''

''தெரியாமல் என்ன? ஆனால் நான் மேம்பாறை யிலே போய் உக்கார்றது எதுக்குன்னு நினைச்சே? கசத்திலே வெளையாடிக்கிட்டிருக்கிற மீன் கூட்டத்



தைப் பார்க்கத்தான். என்ன மீனு... என்ன மீனு.... அத்தனையும் வெள்ளி! துள்ளறதும், பாயறதும் ஒண்ணை ஒண்ணு தொரத்தரதும் என்ன, வேடிக்கை! என்ன வெளையாட்டு! நாள்முழுதும் பார்த்துக்கிட்டிருந்தாலும் பசிகூடத் தெரியாது.''

''அதனாலேதான் ஆத்தா வச்சிட்டுப் போனதைக்கூடச் சாப்பிட வீட்டுக்குப் போகாமே இங்கேயே உக்காந்திருக்கயா ?''

''ஆமாம். எப்ப சாப்பிட்டால் என்ன? ஆத்தாவுக்குத் தெரியவா போகுது ?''

''ஆத்தாதான் உன்னைத் தேடிக் கூட்டியாரச் சொல்லி என்னை அனுப்பிச்சது மங்கா. உடம்பு முடியாமே வீட்டிலே வந்து படுத்திருக்கு.''

''ஆமாம்...ஆத்தா எப்பவுமே இப்படித்தான். வேலை வேலைன்னு உடம்பை வதைச்சுக்கிட்டா உடம்பு எப்படி நல்லா இருக்கும்?'' என்று சிணுங்கினள் மங்கா.

வள்ளி சிரித்தாள். ''வேலை செய்யாட்டி பொழைப்பு எப்படி நடக்கும்?''

''என் அம்மா வேலைக்குப் போக மாட்டேன்னு சத்தியம் செய்து குடுக்கட்டும், அடுத்த நாளே நான் வேலைக்குப் போகிறேனா இல்லையா பாரு'' என்று வீராப்புப் பேசினள் மங்கா.

''ஐயோ, ஐயோ, மங்காவே, மங்கா....'' என்று சிரித்தாள் வள்ளி.

''எங்க வள்ளியக்காவே அக்கா. நீ சிரிச்சாத்தான் எவ்வளவு நல்லா இருக்கு. கடிச்சுத் தின்னுடலாமான்னு தோணுது!'' என்று அவளைக் கட்டிக் கொண்டு முத்தம் கொடுத்தாள் மங்கா.

**வீ**ட்டில் வெள்ளாத்தாள் சோர்ந்து படுத்திருக்கவில்லை. விறுவிறுப்பு தீர்ந்ததுமே எழுந்து மகளுடன் போர் தொடுக்கத்தான் தயாராகக் காத்திருந்தாள்.

மங்காவைக் கண்டதுமே சிறுத்தை போல் சீறிப் பாய்ந்தாள்.

''எங்கேடி, போய்த் தொலைஞ்சே ? சோறு திங்கக்கூடத் துப்பில்லே?''

''பசிக்கல்லே ஆத்தா. மூலைக் கடையிலே முறுக்கு வாங்கிச் சாப்பிட்டுட்டேன்'' என்றாள் அலட்சியமாக.

''ஏது துட்டு ?''

''துட்டு ஏது? கணக்குத்தான்.''

''கணக்கா, அந்த முனியாண்டி கடையிலே கணக்கு வெச்சுக்க வேண்டாம்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன் உனக்கு'' என்று ஆத்திரத்துடன் கூறிய வெள்ளாத்தாள் மங்காவின் கூந்தலைப் பிடித்திழுத்தாள்.

''ஊர் வம்பை விலைக்கு வாங்கிக் கிட்டுத் திரியறது போதாதுன்னு இப்படி வேறே மானத்தை வாங்கறயா? உன்னை அடக்குவார் இல்லேன்னு நினைச்சே ?'' என்று கத்திக் கொண்டே தன் கையிலிருந்த விறகுக் கட்டையால் கண்மண் தெரியாமல் அவளை மொத்து மொத்தென்று மொத்தினாள்.

''ஆத்தா, விட்டுடு, விட்டுடு!'' என்று குறுக்கிட்டாள் வள்ளி.

''நீ போயிடு வள்ளி, இப்படி ஒரு மக இருக்கிறதைவிடச் செத்துத் தொலையறது மேல். என் கையாலே இன்னிக்கு இவளைக் கொன்னு போட்டுடறேன்'' என்று மேலும் மொத்திக்கொண்டேயிருந்தாள் வெள்ளாத்தாள்.

''நல்லா அடி. கொன்னு போட்டுடு. அப்படியாவது உன் ஆத்திரம் தீரட்டும்'' என்று அழாமல் கூறியவாறு அவ்வளவு அடியையும் உடம்பில் தாங்கிக் கொண்டிருந்தாள் மங்கா.

கை ஓய்ந்ததும் வெள்ளாத்தாள் விறகுக் கட்டையை வீசியெறிந்து விட்டு அப்படியே பாயில் துவண்டு உட்கார்ந்து இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டாள். அவளது ஆத்திரமெல்லாம் இப்போது அழுகையாக மாறியிருந்தது.

''ஹூம்!'' என்று அலட்சியமாக முகத்தை ஒரு வெட்டு வெட்டிய மங்கா, உடம்பில் பட்ட அடிகளை உதறியெறிபவள் போல் கைகளால் உதறிவிட்டுப் பானையிலிருந்த சோற்றை மண் சட்டியில் எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிட உட்கார்ந்தாள்.

'சிரிப்பதா அழுவதா?' என்று தெரியாமல் ஒரு பெருமூச்சுடன் அங்கிருந்து நகர்ந்தாள் வள்ளி.

**சு**ருளியாற்றிலிருந்து வீரன் வாய்க்கால் பிரியும் இடத்தில் ஒரு மேட்டுப் பாங்கான இடத்தில் தன்னந்தனியே அமைந்திருந்தது அந்தச் சிறிய ஓட்டுக் கூரை வீடு. இருபுறமும் உயர்ந்து நிற்கும் பச்சைப் பசேலென்ற மலைகளுக்கிடையே குறுகலானதொரு பள்ளத்தில் குத்துக் குத்தான பாறைகளினூடே சுழித்தோடிக் கொண்டிருந்தது சுருளியாறு. அந்த ஆற்றின் போக்கைத் தடுத்து வீரன் வாய்க்காலில் திருப்பி விடுவதற்காகப் பாறைகளோடு சேர்ந்தாற்போல் கட்டப்பட்டிருந்த ஒரு தணிவான சுவரும் அதையடுத்து வீரன் வாய்க்கால் அணையும் இருந்தன. வீரன் வாய்க்காலில் தேவைக்குத் தகுந்தாற்போல் தண்ணீரை விடுவதற்கு உதவியாக ஒரு கதவு அணையில் பொருத்தப்பட்டிருந்தது. கை பலத்தாலேயே அந்தக் கதவை மேலும் கீழும் ஏற்றி இறக்குவ

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கென்ற, துவண்ட ரோமம்



**இளமையில் வழுக்கை**
இங்ஙனம் ஏற்படுவதைப் பெரும்பாலும் தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வானநிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1.

# Silvikrin

**சில்விக்ரின் –கேச ஆரோக்கியத்திற்கான வழி**




**ப்யூர் சில்விக்ரின்**
கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கான தோரு தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**
நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படியவைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது



SP/1/P/2/66

தற்கு வசதியாக அணைக்கட்டுக்கு மேலே ஒரு பக்கமாக அமைக்கப்பட்டிருந்த ராட்டின யந்திரம் பயன்பட்டது. மழைக் காலத்தில் கருளியாறு வெள்ளச் சுழிப்புடன் சீறி வருமே, அப்போதெல்லாம் அந்த வெள்ளம் வீரன் வாய்க்காலையும் நீர்த் தேக்கத்தையும் பாதித்துச் சேதம் விளைவிக்காமல் தடுப்பதற்காகக் கதவை நன்றாகத் தூக்கி வெள்ளத் தண்ணீரை ஆற்றுப் படுகையில் திருப்பி விடுவார்கள். மற்ற சாதாரண நாட்களில் அணைக் கதவு அடைத்தே யிருக்கும்.

ஆரம்ப காலத்தில் அந்த அணைக் கட்டுக்கான கட்டுமான வேலைகளும், மற்ற வேலைகளும் நடந்து கொண்டிருந்த போது ஓர் எஞ்சினீயர் அங்கேயே தங்கி எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளவேண்டியதாயிருந்தது. அவருடைய தேவைக்காகத்தான் மேட்டுப் பகுதியில் அந்தச் சிறிய ஓட்டுக் கூரை வீடு கட்டப்பட்டது. அணைக்கட்டு வேலைகள் பூர்த்தியான பிறகும் அந்த வீடு மாற்றி மாற்றி யாராவது ஒரு எஞ்சினீயருடைய வாசஸ்தலமாகப் பயன்பட்டு வந்தது.

சாதாரணமாக அங்கு வந்து தங்கும் எஞ்சினீயர் எவரும் இரண்டு மூன்று மாதங்களுக்கு மேல் அந்த வீட்டில் தங்குவதில்லை. சுற்று வட்டாரத்தில் எங்குமே வீடு இல்லாத அந்த இடத்தில் தன்னந் தனியே இருப்பதற்கு எஞ்சினீயர் தயாராக இருந்தாலும் அவருடைய குடும்பத்தினர் தயாராயிருக்க வேண்டுமல்லவா? ஆகவே, அந்த வீடு வருஷத்தில் ஆறு மாதங்களுக்கு மேல் பூட்டித்தான் கிடக்கும்.

அங்கு காவலுக்காக நியமிக்கப்பட்டிருந்த கூர்க்காக் கிழவன் போலாநாத் மட்டும் அந்த வீட்டையடுத்தாற்போல் ஒரு சிறு குடிசையமைத்துக் கொண்டு நிரந்தரமாக அங்கே குடியிருந்தான்.

சாதாரணக் காவல் வேலையைத் தவிர கருளியாற்றின் வெள்ளப்பெருக்குக்குத் தகுந்தாற்போல் அணைக் கதவை ஏற்றி யிறக்கும் பொறுப்பும் இப்போது போலாவிடமே விடப்பட்டிருந்தது.

எதிலுமே விருப்பு வெறுப்பு இல்லாத பிராணி போலா. அவனுடைய அபிலாஷைகளின் சாம்ராஜ்யமே அவனுடைய சிறிய ஹுக்காவில்தான் அடங்கியிருந்தது. விறுவிறுப்பு இல்லாத வேலை. பசி நேரத்துக்கு ஏதாவது சாப்பிட்டுவிட்டு, கையில் ஹுக்காவுடன் வெய்யிலில் வந்து உட்கார்ந்தால் வெயிலுக்குத் தகுந்தாற்போல் நகர்ந்து நகர்ந்து உட்காருவதைத் தவிர வேறு சலனம் தேவையில்லை.

போலாவின் மனத்தில் ஏதாவது குறையொன்று உண்டென்றால் அது அந்த வீட்டைப் பற்றித்தான். தொடர்ச்சியாக யாருமே அந்த வீட்டில் குடியில்லாதது அவனுக்குப் பெரிய குறையாகத்தான் இருந்தது. அந்தக் குறையும் இப்போது தீர்ந்து விட்டது. புதிதாக வந்திருக்கும் எஞ்சினீயர் அந்த வீடு அமைந்திருந்த சூழ்நிலையைக் கண்டு பரவசமாகிப் பேசவில்லையா ?

“ஏ, கூர்க்கா....!”

இதமான மாலை வெயிலை நுகர்ந்தவாறு அரைக்கண் மூடி ஹுக்காவில் ரசனையில் ஆழ்ந்திருந்த போலா, முரட்டுக் குரலில் இந்த அழைப்பைக் கேட்டதும் புத்துணர்வு பெற்றுத் திரும்பினான். காளியண்ணன் நின்று கொண்டிருந்தான்.

“அரே காளி, என்ன தம்பி?”

“ஐயா இல்லே....?”

“இன்னும் டூட்டிலேர்ந்து திரும்பலே. நீ உக்காரு” என்று எதிரேயிருந்த புல் மேட்டைக் காட்டினான் போலா. அவனுக்குத் தமிழ்ப் பேச்சு சரளமாக வரும். எங்காவது வார்த்தை தட்டும் இடத்தில் ஹிந்தி வார்த்தையைப் போட்டுச் சமாளித்துக் கொள்வான். ஆனால் அவனுக்குப் புரியாத உச்சரிப்பு குற்றியல் உகரம்தான். “உக்காரு” என்று சொல்லும் போது கடைசியிலுள்ள “ரு”வைப் பாதியாக உச்சரிப்பதை அவன் ஒப்புக் கொள்வதில்லை; மாறாக நீட்டியே உச்சரிப்பான்.

“ஏதூ? ஐயாவை எதுக்கூ பாக்கணும்?”

“உனக்கூ தெரியாதூ.... ஐயா தானே எனக்கூ எசமான்....!” என்று போலாவின் பேச்சை கிண்டல் செய்தவாறு புல்மேட்டின் மேல் உட்கார்ந்தான் காளியண்ணன்.

“பீடி வேணுமா?”

“இருக்கூ” என்று நொடித்தவாறு காளியண்ணன் சட்டைப் பையிலிருந்து பீடியை எடுத்துப் பற்ற வைத்தான்.

“உன் தங்கச்சி எப்படி இருக்கூ?”

“நல்லா இருக்கூ!”

போலா பொக்கை வாயைத் திறந்து சிரித்து விட்டான். சிரிக்க ஆரம்பித்ததுமே இருமல் பிடித்துக் கொண்டது. இருமல் சற்று அடங்கியதும் சிரித்துக் கொண்டே கூறினான்: “நீ அப்பவும் முரடு, இப்பவும் முரடு.”

“எப்பவும் முரடு!” என்று முடித்தான் காளியண்ணன்.

மோட்டார் சைக்கிளின் படபட வென்ற ஒலி கேட்டது.

ஹுக்காவை ஒருபுறமாக வைத்த போலா, ''ஐயா வந்திட்டாங்கோ'' என்று கூறிக் கொண்டே, கூனல் முதுகை நிமிர்த்திக் கொண்டு எழுந் தான். காளியண்ணனும் பீடியைக் கீழே எறிந்து காலால் தேய்த்துவிட்டு எழுந்து நின்றான்.

அந்த வீட்டுக்குக் குடி வந்து நிலைப் பட்டதுமே சென்னையில் தன் நண்பன் வீரமணியிடம் விட்டு வைத்திருந்த மோட்டார் சைக்கிளைத் தனது உப யோகத்துக்காகத் தருவித்துக் கொண் டிருந்தான் குமரன். முந்திய தலைமுறை யைச் சேர்ந்த கனமான மோட்டார் சைக்கிள். மின்சார இலாகா அமைத் திருந்த மலைப் பாதையில் செல்வ தற்கு அது மிகவும் சௌகரியமாக இருந் தது. வீட்டிலிருந்து காரியாலயம் மூன்று மைல் தொலைவில் இருந்தது. தேவை யானால் காரியாலயத்துக்கு ஜீப்பையே வரவழைத்து அதில் போய்க் கொள்ள முடியும். ஆனால் குமரன் அதை விரும்ப வில்லை. இருபுறமும் காட்டுமரங்களும் செடி கொடிகளும் செறிந்து வளர்ந்து ஏற்றமும் இறக்கமுமான அந்த மலைப் பாதையிலே சுதந்திரப் பறவையாகத் தனது மோட்டார் சைக்கிளில் சுற்று வதையே அவன் விரும்பினான்.

சம்பா நீர்த் தேக்கத்துக்குச் செல் லும் மோட்டார்ப் பாதையிலிருந்து அந்தத் தனி வீட்டுக்குத் திரும்பும் கிளைப் பாதை பள்ளமான பகுதியில் சிறிது தூரம் இறங்கிய பிறகு சட் டென்று மேல் நோக்கி ஏறித் திரும்பு வதா யிருந்தது. மோட்டார் சைக்கிள் கேட்டைத் தாண்டி உள்ளே வந்த போதுதான் போலாவுடன் காளியண் ணன் நிற்பதைக் குமரன் பார்த்தான்.

''வணக்கம் சார்.''

''என்ன காளி? ஏது இவ்வளவு தூரம்?'' என்று கேட்டான் குமரன் மோட்டார் சைக்கிளிலிருந்து இறங்கிய வாறு.

''நீங்க இப்படிச் செய்வீங்கன்னு நான் எதிர்பார்க்கவேயில்லை, சார்.''

''என் கடமையைச் செய்யாமல் இருக்க முடியுமா? நீயே சொல்லு.''

''அன்னிக்கு நீங்க என்ன சொன் னீங்க, எதைப் பத்தியுமே ரிப்போர்ட் செய்யறது உங்களுக்குப் பிடிக்காதுன்னு சொல்லலையா ?''

''உண்மைதான். இப்போது நான் உன்னைப் பற்றி மேலதிகாரிகளுக்கா ரிப்போர்ட் பண்ணியிருக்கிறேன்? இனி மேல் இந்த மாதிரித் தவறுதல் நடக்கக் கூடாது என்று தனிப்பட்ட



''எனக்கு உயிருக்கு உயிரான பிரச்னை தீர்ந் தது! என் மகள் ஸரளா டாக்டர் பட்டம் வாங்கி டாக்டர் ஆயிட்டா!''

''ரொம்ப சரி. உங்களுக்கு உயிருக்கு உயிரான பிரச்னை தீர்ந்தது. இனிமேல் எத்தனை உயிர்கள் தீர்ந்து போகணுமோ!''

முறையிலே உனக்குத்தானே எச்சரிக் கைக் கடிதம் அனுப்பியிருந்தேன்.''

''அது போதாதா சார்? ஆபீஸ் மூலமா வந்த எச்சரிக்கை எப்படியும் என் சர்வீஸைப் பாதிக்கத்தானே செய்யும்?''

''பாதிப்பதும், பாதிக்காததும் நீ மேல்கொண்டு நடந்து கொள்வதைப் பொறுத்திருக்கு'' என்றான் குமரன் சாந்தமாக.

''ஓகோ....'' என்று உறுமினான் காளியண்ணன் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு.

அவன் முகத் தோற்றத்தைக் கவ னிக்காதவன் போல் குமரன் கூறினான்: ''இதையெல்லாம் மனசிலே போட்டுக் கொள்ளாதே, காளி. இனி மேலாவது ஒழுங்காக உன் வேலையைக் கவனி போ!'' என்று கூறிவிட்டு அங்கு நிற் காமல் வீட்டை நோக்கி நடக்க ஆரம் பித்தான். அவனைத் தொடர்ந்து நடந்த வாறே காளியண்ணன் கூறினான் : ''சார், ஆரம்ப காலத்திலேந்து இங் கேயே என் வேர்வையைச் சிந்தி உழைச்சு வர்ற ஆளு நான். இது வரைக்கும் யாரும் என் வேலையிலே குறை சொன்னதில்லே. நேத்து வந்த வங்க நீங்க. உங்ககிட்டேயிருந்து நான் எச்சரிக்கைக் கடுதாசியை வாங்கிக் கட் டிக்கும்படி ஆயிடுச்சு.''

''அதற்கென்ன செய்வது காளி? நான் வந்ததும் வராததுமாகத்தானே இந்தத் தவறுதல் நடந்திருக்கு. நான் நேத்து வந்தவனாக இருக்கலாம். ஆனால் உன் குற்றத்தைக் கண்டிக்கும் அதிகாரமும் பொறுப்பும் எனக்கு உண்டு, இல்லையா ......?''

''சார், இந்தக் காளியை நீங்க புரிஞ்சுக்கிடலே.''

''அதற்கு அவசியமுமில்லை. தவிரவும் ஆபீஸ் விவகாரத்தை வீட்டு வரைக்கும் கொண்டு வந்து மல்லுக்கு நிற்பது எனக்குக் கொஞ்சமும் பிடிக்காது.''

''சார், நீங்க அதிகார மமதையிலே என்னை எப்படி வேணும்னாலும் அவமானப்படுத்தலாம்னு நினைச்சிக்கிட்டிருக்கீங்க. ஆனா இந்தக் காளி தன்மானமுள்ளவன் சார்.''

''அதை நீ உன் வேலையிலே காட்டணும்.''

''காட்டத்தான் போறேன். நீங்களும் பார்க்கத்தான் போறீங்க'' என்று அழுத்தலாகக் கூறிவிட்டுக் காளி அவனுக்கு வணக்கம்கூடத் தெரிவிக்காமல் வேகமாக அங்கிருந்து நடந்தான்.

தாழ்வாரத்தில் போடப்பட்டிருந்த நாற்காலியில் அமர்ந்து எதிரே பள்ளத்தாக்கில் ஓடிக் கொண்டிருந்த சுருளியாற்றையும் அதன் இருபுறமும் நெடிதுயர்ந்து நின்றிருந்த நீல மலைகளையும் ரசிக்க ஆரம்பித்தான் குமரன்.

'' இந்தக் காளிகிட்டே நீங்க உஷாரா யிருக்கணும் ஸாப்'' என்றான் போலா.

''இது காட்டுப் பிரதேசம் போலா, உஷாராக இருந்துதான் ஆகணும். அது சரி, போலா, உன்னைப் பற்றி நீ ஒன்றுமே சொல்லிக் கொள்ளவில்லையே !''

''சொல்லிக்கிறதுக்கு என்ன இருக்கு ஸாப்? உலகத்திலே நான் அகேலா ஆத்மி, அறுபது வயசு ஆகப் போகுது. ஆண்டவன் இன்னும் எத்தனை வருசம் போட்டிருக்குதோ? இப்படியே தள்ளிட்டுப் போயிடணும்.''

''உலகத்திலே உனக்கு யாரும் கிடையாதுன்னு சொல்றே ?''

''பீஹார் பூகம்பத்தில் எங்க குடும்பமே நசிச்சுப் போச்சு. நான் ஒருத்தன்தான் மிஞ்சினேன். தற்கொலை செய்துக்க இஷ்டமில்லே. மிலிடெரியிலே சேந்தேன். மலேயா, பர்மா, கொஹிமா எங்கெல்லாமோ என்னை அனுப்பினாங்கோ. நல்ல நல்ல ஜவான்கள்ளாம் என் கண்ணெதிரேயே செத்து விழுறதைப் பார்த்தேன். ஆனா எனக்குச் சாவு வரலே'' என்று கூறி வந்த போலா, சட்டென்று தன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

''வருத்தப்படாதே, போலா. உன்னைப் போலவேதான் நானும். சொந்தமென்று சொல்லிக் கொள்ள எனக்கும் இந்த உலகத்திலே யாருமே கிடையாது'' என்றான் குமரன்.

''என்ன ஸாப், தமாஷ் பண்றீங்க?''

''இல்லே போலா, உண்மையிலேயே நான் வாழ்வில் தனிக்கட்டைதான். நான் பிறக்கும் போதே தாயை விழுங்கிக் கொண்டுதான் பிறந்தேன். மனமுடைந்த தகப்பனார் பர்மாவிலிருந்த சொத்துசுகங்களை யுத்தத்தில் பறி கொடுத்து ஒரே குழந்தையான என்னை எடுத்துக் கொண்டு தாய்நாடு திரும்பினார். பழைய பந்துக்களைத் தேடிக் கண்டுபிடித்து என்னை அவர்களிடம் ஒப்படைக்க நினைத்தாரோ, என்னவோ? ஆனால் தாய்நாட்டில் கால் வைத்த மறுமாதமே அவர் காலம் முடிந்துவிட்டது.''

''அப்படியா ஸாப்? என்ன கஷ்டம்?''

''தாய் தந்தை இருவர் முகத்தையும் பார்த்தறியாத அனாதையாகத்தான் நான் என் வாழ்க்கையைத் தொடங்கினேன். அப்பா கையோடு கொண்டு வந்திருந்த ரொக்கத் தொகை பாங்கில் எனக்காக வளர்ந்து கொண்டிருந்தது. அதை முதலாக்கி என்னிடம் ஒப்படைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த வக்கீல் எனக்குத் தெய்வம் போல் உதவினார். என்னை ஓர் ஆசிரமத்தில் சேர்த்துவிட்டு என் படிப்புக்கெல்லாம் ஏற்பாடு செய்தார். ஆனால் என் துரதிர்ஷ்டம் என் தெய்வத்தையும் என்னிடமிருந்து பறித்துவிட்டது. தந்தையின் ஸ்தானத்தில் அவரை வைத்து வணங்க நினைத்த என் ஆசையில் மண் விழுந்தது. நான் கல்லூரிப் படிப்பை முடித்து வெளியே வருவதற்குள்ளேயே அந்த உத்தமரும் என்னைத் தனி மரமாக நிறுத்திவிட்டுப் போய் விட்டார்.''

''கேட்கவே துக்கமாயிருக்கு ஸாப்.''

''ஆனால் என்னைப் பார்த்தால் இப்படி துன்பம் அநுபவித்தவன் என்று தெரிகிறதா? எல்லாவற்றையும் துடைத்துப் போட்டுவிட்டுக் கவலையில்லாமல் சுற்றிக் கொண்டிருக்கிறேன்.''

''படிச்சவங்களுக்கும், படிக்காதவங்களுக்கும் அதுதான் வித்தியாசம் '' என்றான் போலா, ஒரு பெருமூச்சுடன்.

சூரியன் மலை வாயில் விழுந்து விட்டது. அந்திச் சிவப்பு எங்கும் படர ஆரம்பித்தது.

சட்டென்று போலா ஏதோ நினைத்துக் கொண்டவன் போல் ''ஸாப், மறந்தே

போயிட்டேன். ஒரு கடுதாசி உங்களுக்கு வந்திருக்கு'' என்றான்.

''கடுதாசியா? இங்கே எப்படி ?'' என்றான் குமரன் வியப்புடன்.

''தப்பா பெரிய ஆபீஸ் அட்ரஸ் போட்டிருக்காங்கோ. பெரிய ஆபீஸ் ஜீப் இந்த ரஸ்தா போகும் போது கொண்டு வந்து குடுத்தாங்கோ'' என்று விவரித்தவாறு அந்தக் கடிதத்தை எடுத்து வருவதற்காகத் தன் குடிசையை நோக்கி விரைந்த போலா காட்டரளிப் புதர் மறைவில் யாரோ நிற்பதைப் பார்த்து விட்டுத் திகைத்தான்.

''யாரது ?''

''நான்தான் தாத்தா'' என்று கூறியவாறு புதர் மறைவிலிருந்து வெளிப்பட்ட வள்ளி அவனெதிரே வந்து நின்றதும் போலாவுக்கு ஒரே வியப்பாய்ப் போயிற்று.

''வள்ளி, நீ எங்கே வந்தே ?''

''ஐயாவைப் பார்க்கணும்னு அண்ணன் ரொம்பக் கோவமா வந்திச்சு. என்ன ஆகுமோன்னு பயந்து நானும் பின்னாலேயே வந்தேன். அண்ணன் அதே கோவத்தோடே திரும்பிப் போறதைப் பார்த்தேன். இங்கே தப்புத்தண்டாவா ஒண்ணும் நடந்துக்கலையே ?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் வள்ளி.

''ஒண்ணும் நடக்கலே வள்ளி. பாய வந்த புலிக்கு உறுமல்கூடச் சரியாக் கௌம்பலே.''

''எனக்குப் பயமாயிருக்கு தாத்தா!''

''பயப்படாதே வள்ளி. ஐயா தங்கமான ஆளு. யாரும் அதுங்கிட்டே தப்பா நடந்துக்க முடியாது.''

''ஆமாம், தாத்தா. ஐயா உன் கிட்டே பேசிக்கிட்டிருந்ததெல்லாம் என் காதிலே விழுந்திச்சு. பாவம், அந்த ஐயாவைப் பத்தி யாருதான் அப்படி நினைக்க முடியும்?'' என்றாள் வள்ளி பெருமூச்சுடன்.

''சரி சரி, இருட்டுக்கு முன்னே நீ வீட்டுக்குப் போ. ஒண்ணுக்கும் கவலைப் படாதே'' என்று கூறி விட்டுப் போலா கடிதத்தை எடுத்து வருவதற்காகக் குடிசைக்குள் சென்றான்.

வள்ளி அங்கிருந்து செல்வதற்காகத் திரும்பினாள். அதற்குள் 'ஐயா'வே எழுந்து வருவாரென்று அவள் எப்படி எதிர்பார்க்க முடியும்? போலாவிடமிருந்து கடிதத்தைப் பெற வேண்டுமென்ற பரபரப்புடன் குமரன் அங்கு வந்த போது வள்ளியைப் பார்த்து விட்டான்.

''இதென்ன, நீ எங்கே வந்தே?''

''சார், அண்ணன் தப்புத் தண்டாவா ஏதாவது பேசியிருந்தாலும் மன்னிச்சுடுங்க. வெளிப் பார்வைக்குத் தான் முரடாத் தெரியும். ஆனால் அது மனசிலே ஒண்ணும் கிடையாது.''

''அண்ணனுக்குத் தங்கை சிபாரிசா? பேஷ், ஆபீஸ் வேலை இப்படி நடந்தால் உருப்பட்டாப்போலே தான்.''

''தப்பு எம்மேலேதான் சார்! அண்ணன் மேலே கிடையாது. அதனாலேதான் என் மனசு கேக்கலே. ஓடி வந்தேன்.''

''அது என்னிக்கோ நடந்த விஷயம். இனி மேலாவது உங்கண்ணனை ஒழுங்கா வேலையைக் கவனிக்கச் சொல்லு. இப்படி யெல்லாம் துணிச்சலா நீ தன்னந்தனியே வரக் கூடாது.''

''ஆபத்துக்குப் பாவமில்லேன்னு.''

''இங்கே யாருக்கும் ஆபத்துஇல்லே. காலா காலத்திலே நீ விடு போய்ச் சேராமல் இருந்தாத்தான் ஆபத்து.''

''நான் வரேன் சார்....'' என்று அவனைக் கையெடுத்துக் கும்பிட்டுவிட்டு வள்ளி அங்கிருந்து சென்றாள்.

போலா கொண்டு வந்து கொடுத்த கடிதத்தைக் கையில் வாங்கியதுமே குமரனின் முகம் மலர்ந்தது. நண்பன் வீரமணியின் கையெழுத்து! தனக்கு உலகில் யாருமே கிடையாது என்று சற்றுமுன் சொன்னது எவ்வளவு மடத்தனம்! உயிருக்குயிரான வீரமணி இருக்கும் போது அவனைத் தனி மரம் என்று யார் சொல்ல முடியும்? ஆர அமர உட்கார்ந்து கடிதத்தைப் படிக்கும் துடிப்புடன் வராந்தாவை நோக்கி விரைந்தான். (தொடரும்)



## பாரதியின் அடிச்சுவட்டில..

மகாகவி பாரதியின் நினைவு நாளையொட்டி வெளியாகும் இவ்விதழில் கவிஞர் பெருமானின் அடிச்சுவட்டில் நடைபயிலும் நவயுகக் கவிஞர்கள் சிலரின் கவிதைகளைத் தொகுத்தளித்து நமது அஞ்சலியைச் செலுத்துகிறோம்.

அடுத்து வரும் பக்கங்களில் காணலாம்

# புதுமைப் புலவன்!

தமிழழகன்

பொன்னின் சுரலெடுத்தான்;
புரட்சித் திறலெடுத்தான்;
மின்னின் செயலெடுத்தான், பாரதி: – கவி
மேலாய்ப் புயல்தொடுத்தான், பாரதி!

விண்ணின் விரிவெடுத்தான்;
விரிவின் உருவெடுத்தான்;
பண்ணின் சுவை எடுத்தான், பாரதி! - தமிழ்ப்
பாட்டாய் அவை தொடுத்தான், பாரதி

கடலின் அகமெடுத்தான்;
காலப் புகழெடுத்தான்;
அடல்கொள் உரமெடுத்தான், பாரதி! - தெய்வ
அமுதத் திறம் தொடுத்தான், பாரதி!

உரிமைக் களமெடுத்தான்;
ஊற்றின் வளமெடுத்தான்;
வறுமைக்(கு) அணை எடுத்தான், பாரதி! -அதை
வதைக்கக் கணை தொடுத்தான், பாரதி!

பெண்ணின் நலமெடுத்தான்;
பெருமைக் குலமெடுத்தான்;
கண்ணன் நெறி எடுத்தான், பாரதி! - இன்பக்
காதல் வெறி தொடுத்தான், பாரதி!

காக்கை உறவெடுத்தான்;
கனவில் இறையடுத்தான்;
வாழ்க்கை முறை எடுத்தான், பாரதி! - புது
வழிக்கே மறை தொடுத்தான், பாரதி!

# நீ இருந்தால்....?

தமிழ்முடி

குற்றாலத் தண்ணருவி அருகி ருந்து
குளிர்நிலவில், இளந்தென்றல் தழுவும்
காலை,

வற்றாத கொம்புத்தேன், வடித்தே ஈந்து
மதுரமிகு பலாச்சுளையை அதனில் தோய்த்து;
பொற்றளம் பெற்றதமிழ் இசையைப் பாடிப்
பூத்தேன் தாயிருந்தே ஊட்டி னாலும்,
பொற்றொடிநீ என்னருகில் இல்லை என்றால்
பொல்லாத வேம்பாகக் கசக்கு தந்தோ!

பாராட்டி வளர்த்த தாய், தந்தை, சுற்றம்
பண்புமிகு நற்றோழர், உறவை விட்டுத்
தாலாட்டி மார்பேந்தும், தமிழ்நா டற்றுச்
சகாராப் பாலைவனம் சார்ந்திட் டாலும்;

கோலமொழிக் காதலிநீ! அருகி ருந்து
கொஞ்சுதமிழ் மொழியுரைத்தால், எனக்குப் போது
பாலைநிலம் காவிரிப்பூம் பட்டி னம்போல்
பரிமளிக்கும்! வேறில்லை! சொர்க்கம்! சொர்க்கம்!

பத்துநாள் பட்டினியாய்க் கிடந்திட் டாலும்
பசிக்கொடுமை என்னுயிரைத் தின்றிட் டாலும்,
முத்துநகை, கொவ்வையிதழ், பருவ வார்ப்பு,
முகிற்கூந்தல், மின்னலிடை, அன்ன பேடே,
அத்தானென் றன்பாக அருகில் வந்தால்
அக்கணமே கடும்பசியும் பறந்திட் டோடும்!
சத்தான அறுசுவையை உண்ட தைப்போல்
தமிழ்க்கவிதை நினைத்ததைப்போல், இன்பம்
பொங்கும்!



உள்ளத்தில் ஒருகண்ணைப் படைத்துவைப்பேன் – அதன்
ஒளிதன்னில் பெரும்புண்ணைத் துடைத்துவைப்பேன்
உள்ளத்தில் பெருவெள்ளம் அடக்கிவைப்பேன் – அதன்
ஓட்டத்தை இருவிழியில் மடக்கிவைப்பேன்

உள்ளத்தில் பெருங்காற்றை அடங்கவைப்பேன் – இந்த
உலகத்தில் புயற்காற்றைத் தொடக்கிவைப்பேன்
உள்ளத்தில் இளந்தென்றல் அணைவுவைப்பேன் – இங்கே
உயர்வென்னுங் காதலுக்கோர் துணையைவைப்பேன்

உள்ளத்தில் பெருந்தீயை மூட்டிவைப்பேன் – அதை
ஊழித்தீ யென்றுபெயர் சூட்டிவைப்பேன்
உள்ளத்தில் திருவிளக்கை ஏற்றிவைப்பேன் – அதை
உயர்ஞானச் சுடரென்று போற்றிவைப்பேன்

உள்ளத்தில் வானத்தில் உயர்வுவைப்பேன் – இங்கே
உய்வுக்கோர் ஞானமழை பொழிவுவைப்பேன்
உள்ளத்தில் பசுமையெனும் மகிழ்ச்சிவைப்பேன் – இந்த
உலகத்துச் சோலையிலே மலர்ச்சிவைப்பேன்

உள்ளத்தில் உணர்வெல்லாங் கூட்டிவைப்பேன் – அதன்
உயிரோட்டம் கவிதையிலே காட்டிவைப்பேன்
உள்ளத்தில் சலனத்தின் நாடிவைப்பேன் – இந்த
உலகத்தில் சலனத்தின் கோடிவைப்பேன்.

# புதுப்பொருளைத் தேடுகின்றேன் !

"பாசுகி"

பழம்பாடல் பலவற்றைப் படித்துப் பார்த்துப்
பக்குவமாய்ச் சிலவரியைப் பிரித்துச் சேர்த்து
அழகான கவிதையிது வென்று சொல்லும்
அற்பச்செயல் புரிவதற்கோ அஞ்சு கின்றேன்!
அழகழகாய் அன்றாடம் காணு கின்ற
அருங்காட்சி பலவினிலும் பண்பைச் சேர்த்துப்
பழகுதமிழ் நடையினிலே பாடு தற்காப்
பாவலன்யான் புதுப்பொருளைத் தேடு கின்றேன்!

காட்டினிலே உறைந்திருக்கும் எழிலை யெல்லாம்
கவிதைகளாய்ப் பலகாலம் படித்து விட்டேன் !
நாட்டினிலே நடக்கின்ற நிகழ்ச்சி யெல்லாம்
நல்லபடி செய்திகளாய்ப் படிக்கின் றேன்யான்!
விட்டுக்குள் நடத்துகின்ற காட்சி தம்மை
விதவிதமாய் உருக்கொடுத்து எழுதி வைத்துப்
பாட்டென்று சொல்வதற்கு நாணு கின்றேன் !
பாவலன்யான் புதுப்பொருளைத் தேடு கின்றேன்!

கன்னியரின் மேனியெழில் சிறப்பை யெல்லாம்
கணக்கற்ற வர்ணனைகள் செய்து விட்டார்!
அன்னையரின் அன்புமொழிப் பெருமை யெல்லாம்
அழகழகாய்க் கவிதைகளாய்ப் புனைந்து விட்டார்!
சின்னவாய் மழலைகளின் சிரிப்பை யெல்லாம்
சேர்த்தெழுதிக் கவிதையெனச் சொல்வ தென்றால்
என்முன்னோர் பலரெழுதி வைத்து விட்டார் !
எதைநானும் புதுமையென எழுதி வைப்பேன்!

முன்னோர்தம் வாழ்வுமுறை சிறப்பி னோடு
மொழிப்பெருமை நூற்பெருமை இசைப் பெருமை
இன்னும்பல் சிறப்பையெல்லாம் கவிதை யாக்கி
இலக்கியமாய்ச் செய்திட்டார் கவிஞர் பல்லோர்!
என்னத்தைக் கவிஞரெலாம் மறந்தா ரென்று
எண்ணாத எண்ணமெலாம் எண்ணி யேங்கி
என்நெஞ்சம் துடிதுடிக்க வாடு கின்றேன்!
எழுதிடவே புதுப்பொருளைத் தேடு கின்றேன்!

# மின்னிளமை

மதுரநாதன்

ஞானக் குளத்தினில் மூழ்கி வந்தேன்—ஒரு
கானக் குயிலிடம் பேசி வந்தேன்—முகில்
வானத் திடை ஒளி மோகினியாள்—புது
முத்தம் கொடுத்திட ஓடிவந்தாள்

வேதத் திரை கடலாடி வந்தேன்—மது
தேகம் மினுக்கிட ஓடிவந்தாய்—புகை
யாக நிலைத்திடும் யாக்கை தனில்—புது
மாயம் நிகழ்த்திட வந்தனையோ?

தூரத் தெரிந்திடும் தோற்றத்திலே—ஒரு
மாயப் பசுமையே காட்சி தரும்—தொலை
தூரக் கனவினில் ஆட்ட மிடும்—பல
காலக் குமிழிகள் செத்துவிழும்!

காத லரும்பிடும் நெஞ்சி னிலே—ஒரு
'காலம்' விதைத்திடும் மின்னல் கொடி—தடம்
பார்த்து நடந்திடும் வேளையிலும்—இடம்
மாறி மிதித்திடும் மின்னல்கொடி!

ஓரிடம் மின்னலுக் கேதடியோ?—கொடுங்
கூட்டினில் ஆட்டங்கள் காட்டுகிறாய்—பொறி
மாறிடும் வேகத்தில் ஆறிடுவாய்—பின்னர்
யாரிடம் நாதியைத் தேடுவாய்?

□■□■□

# மயிலும் மங்கையும்

குடந்தை புகழேந்தி

மான்விழி மங்கை நிற்க
மயங்கிய மயிலும் பார்க்கத்
தேன்மொழி தமிழில் பேசத்
தெளிந்திட அமர்ந்த தங்கே!

எழில்மிகும் மேனி தாங்கி
ஏந்திழை மயிலை நோக்க
பொழில்திகழ் காவில் வாழும்
பொற்புடை மயிலும் நாணும்!

மயிலுடைத் தோகை போன்று
மங்கையின் கூந்தல் தோன்ற
கயல்விழி கடைக்கண் நோக்க
காமவில் எதிர்த்து நோக்கும்!

சாயலால் வினவப் பார்த்துச்
சமைந்திடப் பாவை நல்லாள்
மாயமாய் மறைய எண்ணி
மானென நகர லானாள்!

காவிலே அழகின் வெற்றி
கலாப மயிலுக் கென்றே
பாவிலே சாற்றும் பாணர்
பாவையே! கேட்ட துண்டோ?

அழகுடன் போட்டி போடும்
ஆண்மயில் கூர்ந்து பார்க்கப்
பழகிடும் மங்கை நாணிப்
பாங்குடன் தலைகுனிந் தாள்!!






நாளுக்கு நாள்...

# உங்கள் மேனியெழிலை ஓங்கச் செய்வது ரெக்ஸோனா

அழகுசாதனத் தைலங்கள் இணைந்த விசேஷக் கலவை யாகிய 'கேடில்' அடங்கியது ரெக்ஸோனா ஒன்றுதான். பூரிக்கும் இன்ப நறுமணம் நேரமெல்லாம் உங்கள்மீது நின்றுநிலவச் செய்வது ரெக்ஸோனா ஒன்றுதான். அன்றாடம் உபயோகியுங்கள் ரெக்ஸோனா.

'கேடில்' அடங்கிய ரெக்ஸோனா
உங்கள் மேனியெழிலுக்கு உகந்தது

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லின்டாஸ்-RX. 25-



# ரசிகமணி டி.கே.சி

## கி. ராஜநாராயணன்

ரஸிகமணி டி. கே. ஸி. ஓர் இலக்கியவாதி மட்டுமல்ல; சிறந்த வாழ்க்கை வாதியும்கூட.

டி. கே. ஸி. அவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டேயிருக்கலாம். அதைவிடப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

அவருடைய முக பாவம் விஷயத்துக்குத் தக்கபடி வெல்லாம் இயற்கையாக — அப்படியே மாறும்.

ஒரு விஷயத்தின் மேல் நகைச்சுவையுடன் உமிழும் போது முகமும், கைகளும், குரலின் ஏற்ற இறக்கங்களும் வெறுப்பை அப்படியே கொண்டு வந்து நிறுத்திவிடும்; நம் காதுகள் விஷயத்தை விட்டுவிட, கண்களுக்கு அவரையே பார்த்துக் கொண்டிருக்கத் தோன்றி விடுவதும் உண்டு.

"ஒரு சமயம் பெங்களூர் போயிருந்தேன். எல்லாரும் என்னுடைய அத்தியந்த நண்பர் ஒருவருடைய வீட்டில் — வீடு என்று சொன்னால் அவருக்குக் கோபம் வரும்! — பங்களா; பங்களாவில் இறங்கியிருந்தோம்.

"ரொம்ப ரூபாய் செலவழித்துக் கட்டியிருந்தார் நண்பர் அந்தப் பங்களாவை. மைசூரில் உள்ள ஒரு பெரிய இஞ்சினியர் ஒருவர் பிளான் போட்டு, கூட இருந்து கட்டிக் கொடுத்தது. அந்த இஞ்சினியரை அவர்கள் புகழு புகழு என்று புகழ்ந்தார்கள்.

"எனக்குப் பங்களா முழுதும் சுற்றிக் காண்பித்தார்கள்.

"'கட்டாயம் நீங்கள் அந்த இஞ்சினியரைப் பார்க்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்கள்.

"குளிப்பதற்காகப் பாத்ரூம் போனேன். குளித்து முடிவதற்குள் பாத்ரூமில் முழங்கால் உயரம் தண்ணீர் கட்டிவிட்டது.

"தண்ணீர் போகிற குழாயில் ஏதாவது அடைத்துக் கொண்டதோ? இல்லை, இல்லை. நன்றாகப் பார்த்தேன். எனக்குச் சிரிப்பும் அதிசயமும் தாளவில்லை!

"நண்பரிடமும், அவருடைய மனைவியிடமும் நேராகப் போய் 'உங்கள் இஞ்சினியரைப் பார்த்தேன்' என்று சொன்னேன். அவர்களுக்கானால் ஒரே ஆச்சரியம். 'அவர் இன்று ஊரில் இல்லையே' என்று ஒருவருக்கொருவர் முகத்தைப் பார்த்துக் கொண்டார்கள்.

"'யார் சொன்னது ஊரில் இல்லை என்று? என் பின்னால் வாருங்கள். இதோ காண்பிக்கிறேன்' என்று சொல்லிப் பாத்ரூமுக்குள் கூட்டிப் போய், 'அதோ தெரிகிறதே. தண்ணீர் போகக்கூடிய குழாய் அந்தக் குழாய்க்குள் இருக்கிறார் உங்கள் இஞ்சினியர்' என்று சொன்னேன்."

டி.கே.ஸி. அவர்களுடைய ஹாஸ்யத்தோடு கூடிய கண்டனத்தை எல்லோராலும் சட்டென்று புரிந்து கொள்ள முடியாது. அவரோடு நெருங்கிப் பழகியவர்களுக்குத்தான் அதன் தெளிவான தாத்பரியம் விளங்கும்.

திடீரென்று உங்களைப் பார்த்து, "மதுரை எங்கிருக்கிறது தெரியுமா?" என்று கேட்பார்.

நீங்கள் விழி விழி என்று விழிப்பதைப் பார்த்து நாங்கள் மனசுக்குள் அநுபவிப்போம். இப்பொழுது அதற்கு விடையை டி. கே. ஸி. அவர்களே சொல்லுவார்.

"மதுரை லண்டனில் இருக்கிறது" என்று ஓங்கிச் சொல்லுவார்!

நீங்களோ 'இதேதடா சங்கடம்' என்று நினைத்துத் தவித்துக் கொண்டிருக்கும்போது, டி. கே. ஸி.யே அந்த ஹாஸ்யப் புதிரை அவிழ்ப்பார்.

---

ரஸிகமணி அவர்கள் இன்று நம்மிடையே இருந்திருந்தால், 85 ஆண்டுகள் நிறைந்திருக்கும், இந்தச் செப்டம்பர் 8ஆம் தேதியில். ஆண்டுதோறும் அவர்கள் பிறந்த நாளைத் திருக்குற்றாலத்தில் சில அன்பர்கள் சேர்ந்து அமைதியான முறையில் ஒரு விழாவாகக் கொண்டாடி வருகிறார்கள். இந்தச் சமயத்தில் ரஸிகமணியின் சில பண்புகளை நினைவூட்டுகிறோம்.

— ஆசிரியர்.

''கொஞ்ச நாளைக்கு முன்பாக, மதுரையில் நம்முடைய தமிழ்ப் பெரும் புலவர்கள் ஒன்றுகூடினார்கள். கம்பரைப் பற்றியும், கம்பராமாயண கவிதைகளைப் பற்றியும் பேசினார்கள்...'' இப்படிச் சொல்லிக் கொஞ்சம் இடைவெளிவிட்டு அந்த இடைவெளியைச் சரி செய்ய இரண்டு பங்கு வேகத்துடன் முத்தாய்ப்பு வைப்பதுபோல் தெளிவாக, ''அங்கு பேசியவர்கள் அனைவரும் இங்கிலீஷில் பேசினார்கள்'' என்று முடிப்பார்!

பின்னொரு நாள் சமையல் கலையைப் பற்றிப் பேச்சு வந்தது.

''நம்முடைய உணவு வகைகளைக் கையினால் தொட்டுப் பிசைந்து உண்பதினால் ஏற்படும் சுகானுபவமே தனி.''

டி. கே. சி. அவர்கள் இலையில் சாப்பிடும் விதத்தை நான் கண்ணால் பார்த்து அநுபவிப்பேன். தயிரை இலையில் சிறிது விட்டுக் கொண்டு அதை இலையின் காம்புக்கு மத்தியில் கொண்டு வந்து, நடு விரலையும், மோதிர விரலையும் பிரித்து இலைக் காம்பின் அனுசரணையை வைத்து டக்கென்று தயிரைக் கையில் எடுத்து விடுவார். எடுத்து மிசையில் படாமல் நீட்டிய நாக்கின் மீது அதைப் படைப்பதே ஓர் அழகு. இலையில் துளிக்கூட மிஞ்சாமல் விரல்களால் திரவத்தை எடுக்கும் 'மாய வித்தை' நமக்கு வரவே செய்யாது.

''ரஸம் என்று ஒன்றை உண்டுபண்ணியிருக்கிறானே, இதற்கு எவ்வளவு பாராட்டினாலும் தகும் தமிழனை. பலகார வகைகள் இருக்கிறதே; அடேயப்பா!''

'பிரயாணத் தோசை' என்று ஒரு வகை தோசை இருப்பதாகச் சொல்லக் கேட்டு அதிசயித்தோம் நாங்கள்.

''அந்தக் காலத்திலெல்லாம், இந்த மாதிரி வாகன வசதிகள் கிடையாதல்லவா? தென்காசியிலிருந்து சிவில்லிப்புத்தூர் போகவேண்டுமானால் கூடார வண்டிதான். போய்ச் சேர மூன்று நாட்களாவது ஆகும். வழியில் வைத்துச் சாப்பிடச் சித்ரான்னங்களும், பிரயாணத் தோசையும் கொண்டுபோவோம்.

''பிரயாணத் தோசை சுடுகிற முறையும், அதற்கு மாவு ஆட்டுகிற மாதிரியும் ஒரு தனி வகையானது. இந்தத் தோசை நாலைந்து நாட்களுக்குக் கெடாமல் இருக்கும்; ருசியும் அதிகமாகிக் கொண்டு வரும். இதற்கென்று ஒரு வகைக் குழம்பு இருக்கிறது. அந்தக் குழம்புக்கும் பிரயாணத் தோசைக்கும் ஒரே கொண்டாட்டந்தான்!

''மோர்க் குழம்பு இருக்கிறதே, அதை வைத்த அன்றே ஊற்றிச் சாப்பிடக்கூடாது. மறுநாளைக்குத்தான் ரொம்ப விசேஷமாக இருக்கும்; மறுநாளைக்குத்தான் அதில் ருசி விளையும்.''

ஒரு சமயம் டி. கே. சி.யிடம் இப்படி ஒரு கேள்வி கேட்கப்பட்டது:

''பாட்டில் வருகிற பல்லவியின் முதல் அடியைப் பதினைந்து தடவை பாடுகிறார்களே ஏன்? ஒருதரம், ரெண்டுதரம் பாடினால் போதாதா?''

டி. கே. சி. இந்தக் கேள்வியைக் கேட்டு அநுபவித்துச் சிரித்தார். அப்புறம் சொல்லுவார்: ''ஒரு பையன்; தன்னுடைய ஐந்து வயகத் தங்கையைக் கையைப் பிடித்து அழைத்து வந்தான். வரும் வழியில் தங்கையின் காலில் ஒரு கல் தடுக்கிக் கீழே விழுந்து விட்டாள். கூட்டிக்கொண்டு வந்த அண்ணன் முதலில் அதைப் பார்த்ததும், ''ஐயோ!'' என்று சொன்னான். அவனுடைய அக்காள் பார்த்தாள். கொஞ்சம் பலக்க நீட்டி, ''ஐயோ...!'' என்று சொன்னாள்.

''இதைத் தாயாரும் பார்க்க நேர்ந்தது. அவள் இன்னும் அழுத்தோடு நீட்டி, ''ஐயோ...!'' என்று சொன்னாள்.

''இப்பொழுது விஷயம் ஒன்றுதான்; ஆனால் அதன் பாவங்கள் கூடுதலாகிக் கொண்டே போகிறது. பல்லவியின் ஆவர்த்தனங்கள் அல்லது பாடலின் இதர அடிகளின் ஆவர்த்தனங்கள் கூடக்கூட அந்தப் பாவத்தின் அழுத்தம் கூடுகிறது.

''இந்த மாதிரி அர்த்தத்தில் உதவாத — பாடலின் சொற்களைச் சிதைக்கும்—ஆவர்த்தனங்களைத் தள்ளுபடி செய்து பாடுவதே பாடலுக்கு மேன்மையை உண்டாக்கும்'' என்றார்.

டி. கே. சி.க்கு வடநாட்டுத் தபேலா வாசிப்பின் மேல் மிகுந்த மோகம்.

''அவர்களைப் பாருங்கள், கச்சேரிகளில் தபேலாவை எவ்வளவு அடக்கமாகப் பாட்டைக் கெடுக்காமல் வாசிக்கிறார்கள் என்று. நம்முடைய மிருதங்க வித்துவான் கச்சேரிகளில் மிருதங்கம் வாசிப்பது எப்படி இருக்கிறது தெரியுமா? 'உன்னை நான் பாட்டைக் கேட்க விடுவேனா; விடுவேனா; விடுவேனா' என்று நம்மைப் பார்த்துக் கேட்கிற மாதிரி அடிக்கிறார்கள்.''

சிற்பங்களைப் பற்றி நிறைய சொல்லியிருக்கிறார்.

''சிற்பங்களைப் பார்க்கிற போது, சிற்பியின் அபார வேலைப்பாடுகளைப் பார்த்து மட்டுமே பாராட்டுகிறது என்பது ஒரு சாமானியனின் காரியம். 'கரும்பின் சோகையை எப்படிக் கல்லில் கொண்டு வந்திருக்கிறான், பாருங்கள். கல்லில் சங்கிலி வளையங்களைச் செய்து விட்டானே!' இப்படியெல்லாம் சொல்லிப் பாராட்டுகிறார்கள். ஆனால் இது அல்ல விஷயம்.

''அந்தக் கல் சிலையின் முகத்தில் பாவத்தைக் கொண்டு வந்திருக்கிறானா சிற்பி? அது இன்றி மற்ற சங்கதிகள் எல்லாம் இருந்து என்னத்துக்கு!

''நான் பார்த்த வரையில் தென்காசிக் கோயிலில் உள்ள சிற்பங்களில் இந்த பாவம் மிக அற்புதமாக வந்திருக்கிறது. முக்கியமாக அந்த நடன மாதர் இருவரின் சிலைகள் அதிவிசேஷமானவை.''

இப்படியாக ரஸிகமணி அவர்கள் சொல்லிய விஷயங்களைப் பற்றி எழுதிக் கொண்டே போகலாம்.

இந்த உலகத்தைப் பார்த்து எப்படி அநுபவிக்க வேண்டும் என்று கற்றுத் தந்தார் எங்களுக்கு.

குற்றாலத்தில் வைத்து நடத்திய அந்த ''சர்வகலா சாலை''யை நான் இன்றும் நினைக்கிறேன்; என்றும் நினைப்பேன்.

# வேலை செய்யும் காலமெல்லாம் அவன் சேமித்திருந்தான்... இன்று அவன் கவலையற்ற மனிதன்.




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

பணம் சேமிக்கவும், கரண்ட், ஸேவிங்ஸ், பிக்ஸெட்—ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்குகள் வைத்துக்கொள்ளவுமான எல்லா வசதிகளையும் வழங்குகிறோம்.

ASP/UCO-13/66




''ஏய், லக்ஷ்மி....! லக்ஷ்மி....!''

''வந்தேன் மாமி! மாமி.... இனிமேல் என்னை எச்சுமின்னே கூப்பிடுங்கோ!''

''ஏண்டியம்மா...?''

''எங்க அம்மா என்னை அப்படித்தான் கூப்பிடுவா. 'லக்ஷ்மி' என்று கூப்பிட்டால், யாரையோ கூப்பிடற மாதிரி இருக்கு.''

''ஏண்டி! 'லக்ஷ்மி'ங்கிற நல்ல பெயரை விட்டு விட்டு எச்சுமின்னு கூப்பிடச் சொல்லறே?'' என்று என் மூத்த மகள் ரமா கேட்டாள்.

''போங்கோ, அக்கா! உங்களுக்கு எப்பவும் கேலிதான்!''

எச்சுமி எனப்பட்ட 'லக்ஷ்மி' தன் ஈரக் கையைப் பாவாடையில் துடைத்துக் கொண்டு ஓடி விட்டாள்.

''அம்மா! நீ இவளை வைத்துக் கொண்டு எப்படித்தான் காலம் தள்ளப் போறயோ!'' ஊரிலிருந்து பிரசவத்துக்காக வந்திருந்த 'ரமா' அலுத்துக் கொண்டே மெதுவாக நாற்காலியில் அமர்ந்து கொண்டாள்.

''சின்னப் பெண்ணானாலும் காரியம் நன்றாகச் செய்வாளாம். எனக்கும் இப்பொழுது ஒத்தாசைக்கு ஆள் வேண்டியிருக்கு. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர ஆள் இருந்தால் தேவலே என்று நம் வீட்டுக்கு வரும் சாஸ்திரிகளிடம் சொன்னேன். தமக்குத் தெரிந்த ஏழைப் பெண்ணென்று கொண்டு வந்து விட்டிருக்கார். பாவம்! அப்பா, அம்மா இல்லையாம். சித்திகிட்டே அவள் அவஸ்தைப்படறாளாம். சுறுசுறுப்பாய் ஓடியாடிச் சொன்னதைச் செய்கிறாள். பார்ப்போம். உன் பிரசவம் நல்லபடியாக முடியணும். அதுவரையில் அவள் இருக்கட்டும்.''

''மாமி! மாமி! இன்னிக்கு முறுக்குக்கு அரிசி ஊறப் போடறேளா?'' என்று கேட்டுக் கொண்டே எச்சுமி தன் பாவாடையை முறுக்கிக் கொண்டு வந்து நின்றாள்.

''ஏண்டி, திடீரென்று முறுக்கு மேலே எண்ணம் போச்சு?''



''இல்லே, மாமி! நேத்தே ரமா அக்கா முறுக்குச் சாப்பிட்டு நாளாச்சுன்னு சொன்னாளே! நீங்க போடுங்க மாமி. நான் அரிசி இடிக்கறேன். மசக்கைக்காரா கேட்டதைச் செய்து கொடுக்க வேணும்னு எங்க அம்மா சொல்லுவா!''

''சரிதான் போடி. பெரிய தாத்துப்பாட்டி! உன்னை நம்பி அரிசி ஊறப்போட்டால் யார் இடிக்கிறது? யார் சுத்தறது? எனக்கு ஏக வேலை இருக்கு. இன்னொரு நாள் மீனாட்சி மாமியைக் கூப்பிட்டு முறுக்குச் சுற்றச் சொல்லலாம்.''

''வேண்டாம் மாமி! நானே சுமாராச் சுத்துவேன். நீங்க போடுங்களேன்.''

''சரிதான் போடி! போய் அடுப்பைக் கவனி. ரசம் பொங்கிடப் போறது!''

சிறிது நேரமாகியும் எச்சுமி அங்கிருந்து நகராததைப் பார்த்ததும் எரிச்சலுடன், ''ஏண்டி, நிக்கறே?'' என்றேன்.

எச்சுமி விசும்பிக் கொண்டே, ''என் மேலே உங்களுக்கு நம்பிக்கை இல்லே, மாமி!'' என்றாள்.

ரமாவும் நானும் அதிசயத்துடன் அவளை உற்றுப் பார்த்தோம். இந்தக் காலத்தில், 'வேலை செய்கிறேன்' என்று சொல்லி அழும் பெண்ணும் இருக்கிறதா என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அன்று தான் சொன்னபடியே, எச்சுமி மாவிடித்து, முறுக்கு சுற்றி, எண்ணெயில் போட்டு எடுத்து, அதைக் கரகரப்பாகத் தட்டில் போட்டு, ரமா முன் கொண்டு வந்து வைத்தபோது எனக்குக் கண்களில் நீர் துளித்து விட்டது.

எப்படியிருந்தாலும் இந்தப் பெண்ணைக் காப்பாற்றுவது என்று மனசுக்குள் தீர்மானம் செய்து கொண்டேன்.

எச்சுமி எனக்கு ஒரு வரப்பிரசாதமாகத் தான் வந்து அமைந்து விட்டாள். பதினொன்று வயதுள்ள பெண்ணாகவே அவள் தோன்றவில்லை. சில சமயம் அவள் பேச்சு என்னையே திகைக்க வைக்கும். பெரிய குடும்

பத்தில் வந்து சேர்ந்த வேலைக்காரப் பெண்ணாகவே அவள் தோன்றவில்லை. நொடியில் வீட்டிலுள்ளோர் அனைவரையும் வசீகரம் செய்து கொண்டு விட்டாள் எச்சுமி. எச்சுமி இல்லாமல் வீட்டில் ஒரு காரியமும் நடக்காது என்ற நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டாள். அவள் முகம் சுளித்து நான் பார்த்ததே இல்லை. அவளைவிட வயதான என் பெண்கள் இருவரும் விரலசைக்க ஆயிரம் சிணுங்கல்கள் சிணுங்கும்போது இப் பெண் மட்டும் அலுக்காமல் சலிக்காமல் வேலை செய்கிறதே என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கும். எச்சுமியின் சுபாவம் விசித்திரமானது. பரம 'வெகுளி'. அவளைப் புரிந்து கொள்ளாதவர்களுக்கு அவள் பேச்சும், செய்கையும் எரிச்சலையே தரும்.

இரவு பதினோரு மணி. ஒரு குட்டித் தூக்கத்துக்குப் பிறகு கீழே ஏதோ சப்தம் கேட்கவே, பூனை உருட்டுகிறதா என்ன என்று பார்க்க எழுந்து வந்தேன். சாமான் அறையில் வெளிச்சம் தெரிந்தது. எச்சுமி ஏணி மேல் நின்று கொண்டு, சாமான்களையெல்லாம் நகர்த்தி ஒட்டடை அடித்துப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

''ஏண்டி வேதாளம்! என்ன செய்யறே? தூங்கலே!''

''தூக்கம் வரல்லே மாமி! சாமான் அறையை ஒழிச்சுப் பெருக்கணும்னு சொல்லிண்டிருந்தேளே! ஞாபகம் வந்தது!''

''சரிதாண்டி! இறங்குடி கீழே! சரியான நேரம் பார்த்தாள் சாமான் அறையைப் பெருக்க. வேதாளம்போல வேலை செய்தது போதும். விடிந்து பார்த்துக்கலாம்!''

''நீங்க போய்ப் படுத்துக்குங்க மாமி! நான் நொடியிலே முடிச்சுட்டுக் கொஞ்சம் அரிசியும் பொறுக்கிட்டுப் படுத்துக்கறேன்.''

''ஏண்டி! உனக்கு என்ன உடம்பு இரும்பிலா செய்து வைச்சிருக்கு? இறங்குடி, எச்சுமி! நீ தூங்காவிட்டாலும் என்னையாவது நிம்மதியா தூங்கவிடு!''

''ஏன், மாமி! ரொம்ப சப்தம் செய்து உங்களை எழுப்பி விட்டுட்டேனா?''

''இறங்குடின்னா.....''

முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு எச்சுமி கீழே இறங்கினாள். கண்களில் துளித்த கண்ணீரை நான் அவளறியாமல் துடைத்துக் கொண்டேன். இப்படியும் ஒரு பெண் என் மேல் அபிமானம் வைக்குமா ? என் மனம் நெகிழ்ந்தது.

மத்தியானம் பன்னிரண்டு மணி. திடீரென்று ரமாவுக்கு இடுப்பு வலி கண்டது. டாக்டர் இன்னும் பத்து நாட்கள் செல்லும் என்று சொல்லியிருந்ததால் சிறிது அஜாக்கிரதையாக இருந்து விட்டேன்.

வேலைக்காரனும் நான்கு நாட்கள் லீவில் ஊருக்குப் போயிருந்தான். குழந்தைகள் எல்லோரும் பள்ளிக்குச் சென்றிருந்தனர். கணவரும் ஊரில் இல்லை.

'டாக்டர் லீலாவதியை அழைத்துக் கொண்டு வரவேண்டுமே! யாரை அனுப்புவது?' நான் துடித்து விட்டேன்.

எச்சுமி தாவணியை இழுத்துச் சொருகிக் கொண்டாள். ''நான் போய்க் கூட்டிண்டு வரேன், மாமி! அக்காவைப் பார்த்துக் கொள்ளுங்கள்.''

நொடியில் வீதியில் இறங்கி மறைந்து விட்டாள் எச்சுமி. அவள் மறைந்த பிறகு தான் என் மடத்தனம் எனக்குத் தெரிந்தது. மூன்று மைல் தூரத்திலுள்ள டாக்டர் வீட்டுக்கு எச்சுமி எப்படிப் போவாள்? கையில் டாக்ஸிக்குக்கூடப் பணம் கொடுத்து அனுப்பவில்லையே!

ரமா துடிதுடிக்க என் தாயுள்ளம் துடித்தது. பிரசவம் சிறிது கஷ்டமாக இருக்கும் என்று டாக்டர் முன்னமேயே எச்சரித்திருந்ததால் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி என் உயிரே துடித்தது.

''பாம்.... பாம்....!'' வாசலில் கார் சப்தம் கேட்டது. எச்சுமி மருந்துப் பெட்டியுடன் இறங்கி ஓடி வந்தாள். நர்ஸ் சகிதம் டாக்டர் லீலாவதி தெய்வம் போல எனக்குக் காட்சி தந்தாள்.

அடுத்த பதினைந்தாவது நிமிடம், ''மாமி! உங்களுக்குப் பேரன் பிறந்தாச்சு. ரமா அக்காகிட்டே பந்தயம் கட்டியிருக்கேன். பிள்ளைதான் பிறக்கும்னு. பத்து ரூபாய் வாங்கிக்கணும்'' என்று சொல்லிக் கொண்டே வெந்நீர்க் குவளையுடன் ஓடி மறைந்த எச்சுமியை நான் வியப்புடன் பார்த்தேன்.

அன்று இரவுதான் எனக்குச் சாவகாசமாக எச்சுமியைக் கூப்பிட்டு, ''ஏண்டி, எச்சுமி ! டாக்டர் வீட்டுக்குப் போய் வர டாக்ஸிகாரனுக்குப் பணத்துக்கு என்ன செய்தாய்?'' என்று விசாரிக்க முடிந்தது. அதே சமயத்தில் அவள் மூளிக் கையில் என் பார்வை பதிந்தது.

எச்சுமியின் ஒரே சொத்து அவள் அம்மா அணிந்திருந்த ஒரு ஜோடி தேய்ந்த பொன் வளையல்கள். எனக்கு விஷயம் விளங்கி விட்டது.

''எந்தக் கடையிலடி வளையலே அடகு வைத்தாய்? பைத்தியக்காரப் பெண்ணே, பணம் கேட்டு வாங்கிப் போகக் கூடாது? ஓடு. சீக்கிரம் போய் மீட்டுக் கொண்டு வா'' என்று கூறிப் பணத்தை அவள் கைகளில் திணித்து அவளை விரட்டி அடித்தேன். பிறகு கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டேன்.

'எங்கிருந்தோ வந்த இந்தப் பெண் நாளுக்கு நாள் என்னை நன்றிக் கடனில் சிக்க வைத்து வேடிக்கை பார்க்கிறாளே! கண்ணன் சேவகனாக வந்ததாகப் பாரதியார் பாடினாரே! அதுபோல இவள் எனக்குச் 'சேவகி' யாக வந்திருக்கிறாளா?'

குழந்தை பிறந்த பதினாறும் நாள், 'தொட்டிலன்று' ரமா தன் கையிலிருந்து இரு பொன் வளையல்களைக் கழற்றி எச்சுமி எவ்வளவு மறுத்தும் பிடிவாதமாகத் தானே அவள் கைகளில் அணிவித்தபோது என் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

''என்னக்கா இது!'' என்று எச்சுமி வளையல்களைக் கழற்ற ஆரம்பித்தாள்.

''ஏய் எச்சுமி! என் பிள்ளையை நீ தூக்கணும்னு இந்த வளையல்களைப் போட்டுண்டு தான் தூக்கணும். இல்லாவிட்டால் தொடக் கூடாது. ஆமாம், ஜாக்கிரதை!'' என்று

ரமா மிரட்டவும், ''ஐயையோ! என்னால் அது முடியாதே. கண்ணனை நான்தானே தூங்க வைக்கணும்'' என்று வளையல்களைத் திரும்பவும் அணிந்து கொண்டாள் எச்சுமி.

மத்தியானம் நான் சாப்பிட்ட பிறகு சிறிது இளைப்பாறப் படுக்கும்போது என் அருகில் வந்து எச்சுமி உட்கார்ந்தால் ஆபத்துத்தான்!

''ஏண்டியம்மா மாமியாரே! என்ன விஷயம்? யாருக்குக் கடிதம் எழுதணும்? என்னை நிம்மதியாத் தூங்க விட மாட்டியா?''

''இல்லே மாமி! இரண்டே இரண்டு கடிதாசிதான். பாவம் ரமா அக்கா கண்ணனை வைச்சுண்டு எப்படித் தனியா சமாளிக்கிறாரோ! இரண்டு வரி விசாரிக்க எழுத வேண்டாமா? நீங்க சொல்லுங்கோ நான் எழுதறேன்.''

மேஜையின் மேலிருந்து காகிதமும், பேனாவும் எடுத்துக் கொண்டு தயாராக உட்கார்ந்து விடுவாள் எச்சுமி.

''ஏண்டீ! அவள் எழுதட்டுமே! அப்புறம் பதில் போடலாம்.''

''இல்லே மாமி! ரமா அக்காவுக்குக் கை ஒழியாது. இங்கே நாம் எல்லாம் எப்படி இருக்கோமோன்னுஎண்ணிண்டே இருப்பா!''

''ஆமாம். உனக்குத்தான் ரொம்ப அக்கறை. இந்த அக்கறை அவளுக்கு இருந்தால், ஊருக்குப்போய் நாலு மாசத்துலே ஒரு லெட்டர்தானா போட்டிருப்பாள்?''

நான் சொல்லுவதை எச்சுமி லட்சியமே செய்ய மாட்டாள். ''க்ஷேமம் எழுதியாச்சு. மேலே சொல்லுங்கோ!''

நான் வாசகத்தைச் சொல்லச் சொல்லக் குண்டு குண்டாக அழகாக எச்சுமி கடிதம் எழுதி முடிப்பாள். தன் கைச்சரக்கையும் சிறிது சேர்த்து எழுதுவாள். பள்ளி வாத்தியார் பெண்ணானதால் பத்தாவது வரையிலே படித்திருந்ததுடன் தானாகவே மேற்கொண்டு நன்றாக விருத்தி செய்து கொண்டிருந்தாள் எச்சுமி.

''அடுத்தது...உங்கள் பெரிய பிள்ளைக்கு..''

''போடீ போ. உனக்கு வேலை இல்லை. உள்ளூர்க் கல்லூரியில் இடம் கிடைத்தும் வேண்டாம்னு வெளி ஊருக்குப் போய் ஹாஸ்டலில் சேர்ந்து கொண்டு, அம்மா கவலையே இல்லாமல் இருக்கான். அக்கறை இருந்தால் அவன் எழுதட்டும்'' என்று நான் சாக்குப் போக்குச் சொன்னாலும் வாரத்துக்கு ஒரு கடிதம் பட்டணத்தில் டாக்டருக்குப் படிக்கும் என் பெரிய பிள்ளை ரவிக்கு எழுதி விடுவேன்.

''இன்னிக்குப் பதில் வரணுமே, வரணுமே!'' என்று எச்சுமி தபால்காரனை எதிர்பார்த்து வீதியில் நிற்கும்போது 'இப்படியும் ஒரு பிறவியா?' என்று நான் அதிசயப்படுவேன்.

''ஏண்டீ என் மடிப் புடவையை எடுக்கக் 'கம்பு' வைத்திருந்தேனே, காணலையே!'' நான் குரல் கொடுப்பதைக் கேட்டு எச்சுமி மாடியிலிருந்து ஓடிவந்தாள். அவள் பின்னால் அருண் மறைந்து நின்றான்.

''என்னடி சமாசாரம்? கம்பு எங்கே?''

## தவற்றைத் திருத்துங்கள்!

1. யாதும் ஊரே யாவரும் கேளிர்
— திருமூலர்
2. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு
— பட்டினத்தார்
3. யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்
— திருநாவுக்கரசர்
4. உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ
— ஐயனாரிதனார்
5. நாமார்க்கும் குடியல்லோம்
— கணியன் பூங்குன்றனார்
6. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றி மூத்த குடி
— சீத்தலைச் சாத்தனார்
7. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே — பாரதியார்
8. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம் — பவணந்தியார்
9. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்
— திருவள்ளுவர்
10. பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல — பனம்பாரனார்

**(சரியான விடை அடுத்த பக்கம் பார்க்க)**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''இன்னிக்குச் சுதந்திரதினமாச்சே மாமி!''

''ஆமாம்....அதுக்கு?''

''அந்தக் கொம்பிலே கொடி கட்டி மாடி மேலே பறக்க விட்டிருக்கோம். தோட்டத்துலே வந்து பாருங்கோ. எப்படிப் பறக்கிறதுன்னு!''

பதினொரு வயதில் என்னிடம் வந்த எச்சுமி இருபது வயதாகியும் இன்னும் குழந்தை மாதிரி இருப்பதை எண்ணிச் சிரித்துக் கொண்டே அவளும், அருணும் ஓடிவந்ததைப் பார்த்தபடி நின்றேன்.

''இன்னிக்கு என்னடி விசேஷம்? பாயஸம் பண்ணியிருக்கே?''

''ஏன் மாமி மறந்துடுத்தா? உங்க பெரிய பிள்ளையின் பிறந்த நாள் இல்லே! இன்னிக்குச் சாயங்காலம் கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்வேனே, அதையும் நான் தான் ஞாபகப்படுத்தணுமா?''

''ஏண்டீ! ஊரிலே இருக்கிறவனுக்கு இங்கே பிறந்த நாள் பாயஸமா?'' என்று சொன்னாலும் அவள் சமயோசித செய்கையை எண்ணி என்னால் வியக்காமல் இருக்க முடியவில்லை.

''என்ன? எச்சுமிக்கு இருபது வயதாகி விட்டதே! யாராவது பையனைப் பார்த்துக் கட்டிக் கொடுக்க வேண்டாமா? எவ்வளவு நாட்கள் இங்கேயே வைச்சிண்டிருக்கிறதாய் உத்தேசம்?....'' என்று இவர் கேட்கும் போதெல்லாம் எச்சுமி, ''போங்கோ மாமா! நான் கலியாணமே செய்துக்க மாட்டேன். உங்களை யெல்லாம் விட்டு விட்டு நான்

முன் பக்கத்து விடை:

1. கணியன் பூங்குன்றனார்; 2. பாரதியார் 3. திருமூலர்; 4. பட்டினத்தார்; 5. திருநாவுக்கரசர்; 6. ஐயனாரிதனார்; 7. சீத்தலைச் சாத்தனார்; 8. பனம்பாரனார்; 9. திருவள்ளுவர்; 10. பவணந்தியார்.

தொகுப்பு: தி. செ. இராமசாமி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

போகவும் மாட்டேன்'' என்று கூறி ஓடி விடுவான்.

''சார், தந்தி!''

''அடியே! உன் டாக்டர் பிள்ளை வருகிறானும் நாளைக்கு.''

''யார் மாமி? உங்க பெரிய பிள்ளையா?''

''ஆமாண்டி எச்சுமி! இரண்டு படி பால் வாங்கிண்டுவா. திரட்டுப்பால் செய்யணும். அவனுக்கு ரொம்பப் பிடிக்கும்.''

அடுத்த நாள் ரவி வந்து இறங்கியபோது குடும்பமே வாசலில் திரண்டு வரவேற்றபோது, ''மாமி... மாமி! இந்தாங்கோ, ஆரத்தி. ஆறு வருஷங்கள் கஷ்டப்பட்டுப் படிச்சுப் பாஸ் செய்துட்டு வரார்'' என்று எச்சுமி கிசுகிசுத்தாள்.

திரும்பிப் பார்த்தேன். எச்சுமி ஆரத்தித் தட்டுடன் நின்றாள்.

''என்னம்மா இதெல்லாம்? ஓஹோ! இந்த எச்சுமிப் பாட்டியின் யோசனையா?'' என்று கூறி ரவி அவளை எட்டிப் பார்த்தான்.

''ஆமாம்! இனிமேல் உங்கள் வாயிலேயும் விழுந்து எழணும்'' என்று கூறிக் கொண்டே எச்சுமி உள்ளே ஓடிவிட்டாள்.

இன்னும் ஒரு மாதம் ரவி ஊரில் இருப்பான். பிறகு பட்டணத்திலேயே சென்று தொழிலை ஆரம்பிக்க உத்தேசம். வீட்டில் பாட்டும், கூத்தும், கேலியுமாக ஒரே அமர்க்களம். ஓயாமல் விருந்தாளிகள். ரவியைப் பார்க்கப் பழைய நண்பர்கள் வந்து போன வண்ணம் இருந்தார்கள்.

ரவியுடன் சேர்ந்து வெளியில் போகவும் வரவுமே எனக்குப் பொழுது சரியாக இருந்தது. அவனுக்குப் பெரிய பெரிய இடங்களிலிருந்து பெண் ஜாதகங்கள் வந்து குவிந்து கொண்டிருந்தன. வீடு இப்போதே கல்யாண வீடு போலக் கலகலப்பாக இருந்தது.

வீட்டுக் கவலை எனக்குச் சிறிதும் இல்லாமல் எச்சுமி வேளா வேளைக்கு விருந்து சமைத்துப் போட்டாள். அலுக்காமல், முகம் சுளிக்காமல் பம்பரம் போல் சுற்றி வந்தாள்.

ரவி வந்து பதினைந்து தினங்கள் இருக்கும். அன்று தன் நண்பர்களுடன் உல்லாசப் பிரயாணம் போயிருந்தான். நான் சிறிது நிம்மதியாக இளைப்பாறிக் கொண்டிருந்தேன். பூனை போல் சப்தம் செய்யாமல் எச்சுமி என் காலடியில் வந்து உட்கார்ந்தாள்.

''என்னடி எச்சுமி! ரவிதான் ஊரிலிருந்து வந்தாச்சே! யாருக்குக் கடிதாசி எழுதணும்?'' என்று நான் கேலியுடன் கேட்டேன்.

கலகலவென்று சிரித்துக் கொண்டு பதில் சொல்லும் எச்சுமி வாய் திறக்காதது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. சட்டென்று திரும்பி அவளைப் பார்த்தேன்.

எச்சுமி கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. தலை குனிந்த வண்ணம் அவள் மௌனமாக அழுதுகொண்டிருந்தாள். நான் பதற்றத்துடன் எழுந்து உட்கார்ந்தேன்.

''எச்சுமி! எச்சுமி! என்னடி ஏன் அழறே? உடம்புக்கு என்ன?'' என் குரல் கவலையில் குளறிற்று.

''மாமி! மாமி! நான் எங்க சித்திகிட்டே போகணும்'' என்று எச்சுமி துக்கத்துடன் விம்மினாள்.

''என்னடி எச்சுமி? இவ்வளவு வருஷமா நினைக்காதிருந்த சித்தி நினைவு இப்போ வந்தது?'' நான் திகைப்புடன் கேட்டேன்.

''மாமி! நான் போகத்தான் வேணும். இல்லாட்டா...இல்லாட்டா...'' என்று தடுமாறியவள், சட்டென்று தன் இடுப்பிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து என் கைகளில் வைத்தாள்.

நான் திகைப்புடன் மெதுவாக அதைப் பிரித்தேன். அது ரவியின் கையெழுத்து. அவன் டைரியிலிருந்து கிழிக்கப்பட்டிருந்த ஒரு காகிதம்.

''லக்ஷ்மி! லக்ஷ்மி! நீ எல்லோருக்கும் எச்சுமி... ஆனால் எனக்கு லக்ஷ்மி. உன்னை விட்டு விலகிப் போனால் உன்னைப் பற்றிய எண்ணங்கள் குறையும் என்று எண்ணி இந்த ஊரில் கல்லூரி இருந்தும், வெளியூரில் சென்று தங்கிப் படித்தேன். உன் கையெழுத்தில் வரும் அம்மாவின் கடிதங்கள் எனக்கு உன் நினைவை அதிகப்படுத்தவே செய்தன. நீ எல்லோர் கண்களுக்கும் சமையற்காரப் பெண்ணாக இருக்கலாம். ஆனால் என் கண்களில் நீ என்றும் லட்சுமியாக, என் இருதய லட்சுமியாகத் தோற்றமளித்தாயே, அன்றிருந்து இன்று வரை உன்னை என்னால் மறக்கவே முடியவில்லை. அந்தஸ்து காரணமாக நான் உன்னை மணப்பதற்கு எல்லோரும் தடையாக இருக்கலாம்.—இருப்பார்கள். என் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளும் ஆற்றல் எனக்கு உண்டு. ஆனால் அதன் காரணமாகப் பலர் மனத்தை உடைக்கும் சுயநலக்காரனாக நான் இருக்க விரும்பவில்லை. நான் உன்னை அப்படி அடைவதைக் கண்டிப்பாக நீயும் விரும்ப மாட்டாய். பிறகு என்னை நீ மதிக்கவே மாட்டாய். கள்ளமில்லா வெள்ளை உள்ளம் படைத்த உன்னைப் பார்த்து எல்லோரும் ஏசவும், 'வேலை செய்யும் வீட்டுப் பிள்ளைக்குச் சொக்குப் பொடி போட்டு மயக்கி விட்டாள்' என்று அவப் பெயர் சூட்டவும் நான் ஒரு நாளும் காரணமாக இருக்க மாட்டேன். அதைவிட நான் உன்னைப் பற்றிய என் எண்ணங்களை என் மனத்துக்குள் சமாதி கட்டி மறைத்து விடுவேன், உனக்குக்கூடத் தெரியாமல்! உன்னை விட்டு விலகிச் சென்று என் வாழ்நாள் முழுவதையும் வைத்தியத் துறைக்கு அர்ப்பணித்து பிரும்மசாரியாகவே காலம் தள்ளுவேன். நீ எனக்கு என்றும் லட்சுமிதான்...''

கசங்கிய நிலையிலிருந்த அந்தக் காகிதம் எப்படி எச்சுமி கைகளில் வந்தது என்று

# லக்மே டால்க் மட்டுமே அளிக்கும்

* நினைவில் நிலைக்கும் நாலு இனிய வாசனைகள்
* மிக மென்மையான பவுடர்




## புதுமலர்ச்சி நீடிக்க ஒரு புதிய முறை!

தேர்ந்தெடுக்க வகைவகையான வாசனைகள், ஒவ்வொன்றுமே மென்மையான பவுடருடன் இணைந்து குலவும் மேன்மை - இவைதாம் லக்மே டால்க் சிறந்து விளங்குவதன் ரகசியம். அதன் மென்மையும், அதிகம் உறிஞ்சும் சக்தியும் அபாரம்...கடும் உழைப்பினூடே நாள் பூராவும் உங்களைக் குளுமையாகவும், புத்துணர்ச்சியுடனும் இருத்துகிறது!
லக்மே டால்க் – மிக மென்மையான பவுடர்... உங்களுக்கு ஏற்ற ஒரே டால்க்!

**லக்மே டால்க்**

லேவண்டர்
ஸாண்டல்
நிர்வாண்
வெட்டிவர்

LK 6-TAM

ஜலதோஷம் மற்றும் புளூ வரும்
தினத்திலே நினையுங்கள்
அனாஸினை மனத்திலே.
வீட்டில் வேண்டிய அனாஸின்
வைத்திருக்கத் தவறாதீர்கள்.
அது எப்போதும் தேவைப்படலாம்.

அறிகுறிகள் : தலைவலி, ஜலதோஷம் மற்றும் புளூ, பல் வலி, உடல் வலி, தசை வலி.
மருந்தளவு: வயது வந்தவர்களுக்கு 2 வில்லைகள். குழந்தைகளுக்கு 1 வில்லை. எத்தனை எளிய முறை!




அனாஸின்

சிறந்தது

ஏனெனில் அது

4 வழிகளில் வேலை செய்கிறது



ASP/GM/AN-12

Registered user: GEOFFREY MANNERS & COMPANY LIMITED

எனக்குப் புரிந்தது. டைரியில் எழுதிய பக்கத்தை ஏதோ காரணமாகக் கிழித்துக் கசக்கிக் குப்பைக் கூடையில் போட்டிருக்கிறான் ரவி. அது வேலைக்காரி மூலமாகக் கீழே வந்திருக்கிறது. லச்சமி அடுப்பு பற்ற வைக்கக் காகிதம் எடுத்திருப்பாள்.

சாதாரணமாக எந்தக் கசங்கிய காகிதத்தையும் பிரித்துப் படித்து ரசித்துவிட்டு அடுப்பில் போடும் சுபாவமுடைய லட்சமி இதைப் படித்து விட்டு என்னிடம் வந்திருக்கிறாள்.

சட்டென்று நிமிர்ந்து லச்சமியைப் பார்த்தேன். பயத்தினால் முகம் வெளிற அவள், "மாமி! மாமி! சத்தியமாக எனக்கு ஒண்ணுமே தெரியாது" என்று முணுமுணுத்தாள்.

இப்பொழுது என் கண்களில் பழைய லச்சமி தென்படவில்லை. அவளை நான் இப்பொழுது புதுக் கண்களுடன் பார்த்தேன். லச்சமியின் பொன் நிறம் இன்றுதான் என் கண்ணில் படுகிறதா? அந்தப் பொன் நிறம் உழைத்து வாளிப்பாக வளர்ந்த உடலில் மின்னிக் கொண்டிருந்தது. அவளுடைய நீண்ட கருண்ட கூந்தல் அவள் அலட்சியமாக அள்ளிச் செருகியிருந்த விதத்திலும் அழகாகக் காட்சியளித்தது. பழைய புடவை யானாலும் அவள் அதைப் பளிச்சென்று கட்டியிருந்த விதம்! ஆஹா! இந்த அழகு ஒரு மாளிகையில் பிரவேசிக்க வேண்டிய அழகு. அடுப்படியில் அழிகிறது. லச்சமியை அன்றுதான் நான் உணர்ச்சியுள்ள ஒரு பருவப் பெண்ணாகக் கண்டேன். என் உடல் சிலிர்த்தது. என் மனத்துள் ஒரு பெரிய போராட்டம். கண நேரம் கண் மூடிச் சிந்தனை செய்தேன்.

கண் விழித்துப் பார்த்தபோது லச்சமி முன்னிலும் அதிகமாக நடுக்கத்துடன் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

லச்சமியை இதுவரை ஒரு யந்திரமாகத்தான் அறிந்திருக்கிறேன். அதனால் அவள் அழகும், பருவமும், அறிவும் என்னுடைய கண்களில் படவில்லை. இன்று புதுக் கோணத்தில் பார்க்கிறேன்.

சாதாரணமாக இந்த நிலை ஏற்பட்டால் லச்சமி ஸ்தானத்தில் இருக்கும் பெண்கள் என்ன செய்வார்கள்? ரவியின் ஸ்தானத்தில் இருக்கும் பிள்ளைகள் என்ன செய்வார்கள்?

கண்டிப்பாக இந்த லச்சமி மாதிரி தன்னைத் தேடிவரும் ஸ்ரீதேவியை விட்டு விலகி ஓட மாட்டார்கள். நிச்சயமாக ரவியைப் போல் தூய எண்ணத்துடன் விலகவும் மாட்டார்கள்.

"லட்சுமி!" என் குரல் எனக்கே புதுமையாக ஒலித்தது. நடுங்கியபடி நிற்கும் லட்சுமியின் கைகளைத் தாவிப் பிடித்து என் அருகில் இழுத்து உட்கார்த்தினேன்.

ஒரு கணம் ஆழ்ந்து சிந்தித்தேன். மறு கணம் என் குரல் உறுதியுடன் ஒலித்தது.

"லச்சமி! எங்க ரவிக்கு என்ன குறைச்சல்? நீ என் அவனைத் தவிக்க விட்டுட்டு ஓடணும்னு பார்க்கிறே?"

லச்சமி தன் காதுகளில் விழுந்த வார்த்தைகளை நம்பாதவள் போல் மிரட்சியுடன் என்னைப் பார்த்தாள். வியப்பின் எல்லையில் நின்ற அவள் பேசவும் சக்தி இழந்து கற்சிலை போல அமர்ந்திருந்தாள்.

நிராசை மிகுந்த அந்தக் கண்களில் ஒரு கணம், ஒரே கணம் மின்னல் போலத் தோன்றி மறைந்த ஆனந்தக் கீற்று! பெண்மைக்கே புரியும் பெண்மை அது! அந்தப் பெண் மனத்தை எனக்குப் புரிய வைத்தது.

"சொல்லு லட்சுமி! உனக்கு ரவியைப் பிடிக்கவில்லையா? அந்த உத்தமமான பிள்ளையின் ஆசையை நான் நிறைவேற்ற வேண்டாமா?"

அடுத்த கணம் "அம்....மா....!" என்று கதறிக் கொண்டே லட்சுமி என் காலடியில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.



"இந்த பிளாஸ்கில் சர்க்கரை போடாத காப்பியும், எனக்கு டிகாக்ஷன் போடாத காப்பியும் கொண்டா!"


"ஒரு வாரமாகச் சப்பாத்தி தானு?"
"என்ன செய்வது? உங்க அம்மாவுக்கு இன்னும் பல் வலி குணமாக வில்லையே?"



"நானே நீங்கள் ரிடையர்டு ஆகிறீர்களே, உங்களுடன் பணியாற்றுகிற குமாஸ்தாக்கள் உங்களுக்கு ஏதாவது பிரசண்ட் செய்ய விரும்புகிறார்கள். உங்களுக்கு என்ன வேணும்?"
"555 ஒரு டின், 777 ஹைறுகால், 007க்கு ஒரு டிக்கெட்!"




ஐம்புலன்களையும், ஆணவ பலத்தையும் வென்ற எறிபத்தநாயனார், ஐவர்களையும், யானையையும் கொன்று வீரத்துடன் நின்றார். அதைக் கண்ட மற்றப் பாகர்கள் புகழ்ச்சோழர் அரண்மனைக்கு ஓடினர். அரண்மனை வாயிலில் இருந்த காவலரிடம், "பட்டவர்த்தனமும், பாகரும் கொலையுண்டனர் என்று கொற்றவனிடம் தெரிவியுங்கள்" என்றனர். காவலர் அவ்வாறே அரசனிடம் தெரிவித்தனர்.

புகழ்ச்சோழர் பொருக்கென எழுந்தார். அவரது திருமார்பில் இருந்த மாலையில் மொய்த்திருந்த வண்டுகள் அப்போது எழுந்தன. அரசருக்குச் சினம் மிகுதியாக எழுந்தபடியால், "யார் இந்தச் செயலைச் செய்தார்?" என்று தெளிவுபடக் கேட்கவில்லை. அரசரது எழுச்சியைக் கண்ட சேனைத் தலைவர்கள் சேனைகளைப் புறப்படுமாறு பறையறைந்தார்கள். வானை மறைத்த கொடிகளுடன் கூடிய எந்திரத் தேர்களும், யானைகளும், குதிரைகளும் புறப்பட்டன. வீரர்கள் வேல், வாள், சக்கரம், மழு, சூலம் முதலிய ஆயுதங்களுடன் புறப்பட்டனர். சங்கம் தாரை, பேரிகை முதலிய பல்லியங்கள் முழங்கின. தேர்ச் சக்கரங்களின் ஒலியும், யானையின் முழக்கமும், குதிரைகளின் கழுத்து மணியும், வீரர்களின் ஆர்ப்பும் சேர்ந்து, உகாந்த காலத்தில் பொங்கும் கடல் ஒலி நாணப் பயங்கரமாக முழங்கின.

> கடுவிசை முடுகிப் போகிக்
> களிற்றெறும் பாகர் வீழ்ந்த
> படுகளம் குறுகச் சென்றான்;
> பகைப்புலத் தவரைக் காணான்;
> விடுசுடர் மழுவொன் றேந்தி
> வேறிரு தடக்கைத் தாய
> அடுகளி றென்ன நின்ற
> அன்பரை முன்பு கண்டான்.

நால்வகைப் படைகளும் தொடர வேந்தர்பெருமான் வீரக்கழல் அணிந்து ஒரு சிறந்த புரவியின் மீது ஏறிக்கொண்டு அரச மாவீதியை அடைந்தார். பாகரும் பட்டத்து யானையும் மாண்டு கிடக்கும் இடத்துக்குச் சென்றார். சென்றவர் பகைவர் ஒருவரையும் கண்டாரில்லை. ஒளிமிக்க மழுவை ஏந்தி அஞ்சாமல் அகலாமல் வீரத்துடன் யானைபோல் நிமிர்ந்து நின்றிருந்த அன்பரைக் கண்டார். நாயனாருக்கு என்ன வீரம், பாருங்கள். "ஆரங் கண்டிகைபூண்ட அடியவர் வீரம் நம்மால் விளம்புந்தகையதோ?" என்கிறார் சேக்கிழார்.

உதிர வெள்ளத்தில் மலை போல் புரளும் யானை முன்னே எறிபத்தர் நின்றிருந்தார். மன்றுளாடும் மணிகண்டருடைய அடியவர் அவர். ஆதலால், அவர் கொன்றிருக்க மாட்டார் என்று கருதிய மன்னர், "இந்த யானையையும் பாகரையும் கொன்றது யார்?" என்று உரத்துக் கேட்டார். அங்கிருந்த ஏனைய பாகர், பார்த்திபனைப் பணிந்து, "வேந்தே! இதோ பரசு தாங்கி நிற்கும் இவரே இந்தத் தீங்கினைச்செய்தவர்" என்றனர்.

'அரனிடம் அன்பு பூண்ட இவர் கருணை வடிவினர். ஆதலால், குற்றமிருந்தாலொழியக் கொல்லமாட்டார். எனவே, யானையும் பாகரும் தவறு செய்திருக்க வேண்டும்' என்று மன்னர் உணர்ந்தார். சேனாதிபதிகளை அழைத்துப் படைகளை விலக்க உத்தர விட்டார். எல்லோரையும் அனுப்பி விட்டுப் புரவியினின்றும் கீழே இறங்கினார்.

"மலை போன்ற மத யானையை எதிர்த்து இத்தவசீலர் பாய்ந்த போது நன்மைக்கு மாறாக வேறொன்றும்

நிகழாததால் நான் தவமுடையேன். எம்பிரானுடைய அடியார் இத்துணைச் சீற்றம் கொள்ளும்படி என்ன பெரும் பிழை நேர்ந்ததோ? அந்தோ! கெட்டேன்'' என்று மன்னர் மிகவும் அஞ்சினார்.

'' மைத்தடங் குன்று போலும்
மதக்களிற் றெதிரே இந்த
மெய்த்தவர் சென்ற போது
வேறொன்றும் புகுதா விட்ட
அத்தவ முடையேன் ஆனேன்;
அம்பல வாணர் அன்பர்
இத்தனை முனியக் கெட்டேன்!
என்கொலோ பிழை?'' என்றஞ்சி.

நாயனாருக்கு யானையால் வேறு ஒன்றுந் தீங்கு விளையாமை குறித்து மகிழ்ந்தார் புகழ்ச் சோழர். தீங்கு என்ற சொல்லைக்கூட அவர் சொல்ல அஞ்சி, ''வேறொன்றும் புகுதாவிட்ட அத்தவமுடையேன்'' என்கிறார்.

புரவியை விட்டிறங்கிய மன்னர், ''என்ன நடந்தது?'' என்றும், ''இந்த யானை என்ன தீங்கு செய்தது?'' என்றும் கேட்கவில்லை. எறிபத்தரைத் தொழுதார். ''சுவாமி! அடியேன் இதனை அறிந்திலேன். அரண்மனையில் கேள்விப்பட்டது ஒன்று. நிற்க, இந்த யானை செய்த குற்றத்துக்குப் பாகர்களுடன் இதனைக் கொன்ற தண்டனையே போதுமா? மேற்கொண்டும் ஏதாவது தண்டனை கொடுக்க வேண்டுமா? உத்தரவிடுங்கள்'' என்று பயபக்தியுடன் கேட்டார்.

நடந்ததைக் கூறினார் எறிபத்தர். மன்னர், ''சுவாமி! இத்துணைப் பெரிய அபராதத்துக்கு இந்தத் தண்டனை போதாது. குற்றம் செய்த யானையைக் கொன்றீர்கள். யானை குற்றம் செய்த போது, அதனைத் தடுக்காதிருந்த பாகரைக் கொன்றீர்கள். குற்றம் புரிந்த யானைக்கு உரியவன் நான். யானையை வைத்திருந்த குற்றத்துக்காக அடியேனையும் கொல்ல வேண்டும். ஆனால், தேவரீருடைய திருக்கரத்தில் உள்ள மங்கள மழுவினால் கொல்லப்படுவதற்கான தகுதி எனக்கு இல்லை. இந்த வாளினால் சிறியேனைக் கொன்று என்னை இந்தப் பாவத்தினின்றும் தீர்வு பெறச் செய்ய வேண்டும்'' என்று கூறித் தமது உடைவாளை எடுத்து நீட்டினார். என்னே மன்னரது பக்தி?

'' அங்கணர் அடியார் தம்மைச்
செய்தஇவ் வபரா தத்துக்(கு)
இங்கிது தன்னால் போதா(து);
என்னையும் கொல்ல வேண்டும்;
மங்கல மழுவால் கொல்கை
வழக்குமன்(று) இதுவாம்'' என்று
செங்கையால் உடைவாள் வாங்கிக்
கொடுத்தனர் தீர்வு நேர்வார்.

மன்னர் கூறியதைக் கேட்ட எறிபத்த நாயனாருக்குத் தலைசுற்றியது. 'இப்படிப்பட்டவரின் யானையையன்றோ நான் கொன்று விட்டேன்? ஓர் அன்பருக்கு உதவி செய்யப் போய் வேறோர் அன்பரை நோகச் செய்து விட்டேனே! இப்போது மன்னரிடமிருந்து நான் உடைவாளை வாங்கிக் கொள்ளாதிருந்தால் அவர் தம்மைத் தாமே வாளால் மாய்த்துக் கொள்வார்' என்று கருதி வாளை வாங்கிக் கொண்டார். அரசரோ, 'என்ன தவம் செய்தேனோ? இப்பெருந் தொண்டர் வாளால் என்னைக் கொன்று என் பிழை தீரப் போகிறது' என்று மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்.

நாயனார் முன்னிலும் பன்மடங்கு விம்மிதமடைந்தார். மன்னரின் அன்பையும், அவருக்குத் தாம் செய்த தீங்கையும் எண்ணித் தம் உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணினார். உடைவாளைக் கொண்டு தம் கழுத்தை அறுத்துக் கொள்ள முயன்றார்.

அதைக் கண்ட புகழ்ச் சோழர், ''பெருமானே! பெருமானே!'' என்று கூவிக் கடிதிற்சென்று நாயனார் கையிலிருந்த வாளையும், கையையும் பிடித்துக் கொண்டார். இருவருக்கும் அன்புப் போர் நிகழ்ந்தது. மன்னர் விடாது பற்றியதால் மாதவராகிய எறிபத்தர் மிகவும் வருந்தி நின்றார்.

அளவிலாத அன்பினால் வந்த அந்த இடரை அகற்றும் பொருட்டு, ''தொழுந்தகை அன்பின் மிக்கீர்'' என்ற அருள் நாத ஒலி வானில் எழுந்தது.

''அன்பிற் சிறந்தவர்களே! உங்கள் இருவரது அன்புநெறியை உலகெலாம் அறிந்து கொள்ளும்பொருட்டு, புனிதமாகிய மலரை யானை சிந்துமாறு சிவபெருமான் அருள்கூட்டியது'' என்றது அந்த ஒலி. அசரீரி ஒலித்தவுடன் யானை உயிர் பெற்று எழுந்தது; பாகரும் உயிர்பெற்றெழுந்தனர். முன்னவனே முன்நின்றால் முடியாததும் உண்டோ?

எறிபத்தநாயனார் தமது கழுத்தில் வைத்த உடைவாளை விட்டு விட்டு



# ஏன் இந்தத் தோற்றம்?

விலை கொள்ளை மலிவு என்று எண்ணி போலிச் சரக்குகளை வாங்கிவிட்டு, அதை உபயோகித்தபின் ஏன் உங்கள் அழகிய முகத்தை இப்படி வைத்துக் கொள்ள வேண்டும்?

●

- இனிமேலாவது நம்பிக்கையான வியாபாரிகளிடம் மட்டுமே வாங்குங்கள்.
- அதுவும், ஒரிஜினல்தானா என்பதை பரிசீலனை செய்து வாங்குங்கள்.

●

57 ஆண்டுகளாகப் புகழ் பெற்றது

## ஆர். எஸ். பதி மருந்து

தலைவலி - ஜலதோஷம் - புளு - கைகால் வலி முதலியவைகளுக்குச் சிறந்தது

●

## ஆர். எஸ். பதி அன் கோ.

(ஸ்தாபிதம்: 1909)

214, 215, மேலமாசி வீதி

தபால் பெட்டி. எண் - 99

மதுரை-1

- தாஜ் பப்ளிசிட்டீஸ்

இவ்வருஷத்திய

# தீபாவளி கலர் - இந்திரா கலர்

பட்டுச் சேலைகளைப் பார்த்தீர்களா?

## 19 முழம்

ஒரே கலர் -
முற்றிலும் புதிய கலர்

❋

6 கெஜத்திலும் கிடைக்கும்
ஒன்-சைட் பார்டர்களிலும் கிடைக்கும்

❋

## கற்பகம் கலருக்கு

இது சரியான ஜோடி—கலர் புடவை

❋

தேவைக்கு இப்பொழுதே
ஆர்டர் கொடுத்தால்
தீபாவளிக்கு
சப்ளை செய்யப்படும்

இவை தவிர
அநேக நூதன ஷேட்களில் எல்லா புதிய தீபாவளி ரகங்களும் எங்களிடம் கிடைக்கும்

## நல்லி சில்க்ஸ்

62, ராயப்பேட்டை ஹைரோடு
லஸ் - மயிலாப்பூர் | சென்னை 4

மன்னரின் திருவடியில் வீழ்ந்தார். தேவர்கள் பூமழை பொழிந்தனர்.

ஈரவே பூட்டும் வாள்விட்
டெறிபத்தர் தாமும் அந்த
நேரியர் பெருமான் தாள்மேல்
விழுந்தனர்; நிருபர்கோனும்
போர்வடி வாளைப்போக எறிந்(து)
அவர் கழல்கள் போற்றிப்
பார்மிசைப் பணிந்தான்; விண்ணோர்
பனிமலர் மாரி தூர்த்தார்.

''உயிர்க்கொலை புரிவது ஐம்பெரும் பாதகங்களில் ஒன்றாயிற்றே? அந்தக் கொலை பாதகம் புரிந்த எறிபத்தரைத் திருவருள் ஆட்கொள்ளுமோ?'' என்று வினவலாம். எறிபத்தர் புரிந்தது பாதகமன்று. அரனிடம் அன்பு பூண்டவர் எவ்வுயிரும் பராபரன் சந்நிதி என்று உணர்ந்து உயிர்களிடம் அன்பு காட்டுவர். சிவஅபசாரம் செய்தோர் மறுமையின் நரகம் புகுந்து பெருந்துன்பமடைவர். அத்துன்பம் அவ்வுயிர்கட்கு நேராதவண்ணம் எறிபத்தர் கருணையினால் புரிந்த இச்செயல் துன்பமாகாது. அது அவ்வுயிர்கட்குப் புரிந்த உதவியேயாகும்.

மன்னர் பெருமானும் நாயனாரும் எழுந்து வானத்தில் ஒலித்த அருள் நாத ஒலியைப் போற்றி நின்றனர். இறைவருடைய திருவருளால் முன் போல் பூங்கூடையில் மலர் நிரம்பியது. அத்திருவருட் செயலைக் கண்ட சிவகாமியாண்டார் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். உறங்கி எழுந்ததுபோல் எழுந்த யானையைப் பாகர்கள் மன்னர் பெருமான் முன்பு நிறுத்தி வணங்கினார்கள்.

''பெருமானே! அடியேன் மகிழும் பொருட்டு இந்தப் பெருமை தங்கிய யானை மீது ஏறி அரண்மனைக்கு எழுந்தருள வேண்டும்'' என்று எறிபத்த நாயனார் புகழ்ச் சோழரை வேண்டிக் கொண்டார். அடியவர் வேண்டுகோளை ஏற்ற புரவலர் யானை மீது ஏறினார். ஏழு கடலும் ஒருங்கே ஒலித்தது போல் சேனைகள் ஆர்த்தன. பொன்னம்பலத்தில் ஆடிய சேவடியைச் சென்னியில் சூடி அரண்மனை சேர்ந்தார் புகழ்ச் சோழர்.

தமது மலர்த்தொண்டினைச் செய்யும் பொருட்டுப் பூக்கூடையுடன் திருக்கோயில் சென்றார் சிவகாமியாண்டார். எறிபத்த நாயனார், சோழருடைய அன்பின் பெருக்கை உன்னி உன்னி உள்ளம் உவந்து தமது திருப்பணியை நோக்கிச் சென்றார்.

அடியார்க்கு எய்தும் இடரினைக் களைந்து உதவி புரிந்த எறிபத்த நாயனார் முடிவில் திருக்கயிலாய மலையில் சிவகணங்களின் தலைவர்கட்கெல்லாம் தலைவராகும் பெரும் பதம் பெற்றார்.

# 19. திருநீற்றுக்காகச் செய்த தியாகம்

திருவருள் மயமானது திருநீறு. வினைகளை நீக்குவதனால் இது நீறு எனப்பட்டது. திருநீறு தெய்விகமானது. ஆதலால், பேய், பில்லி, சூன்யம், நோய் முதலிய கொடுமைகளினின்றும் உயிர்களைக் காப்பாற்றும். இதனால் காப்பு (ரக்ஷை) எனப்படும். திருநீறு மேலான ஐசுவரியத்தைத் தருவதனால் விபூதி என்று வழங்கப்படும்.

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவநெறி
சிங்கார மான சிவனடி சேர்வரே

என்பது திருமந்திரம்.

சந்நியாசியும் ஒருவேளை திருநீற்றினைத் தரித்துக் கொள்ளத் தவறுவாராயின், உபவாசமிருந்து பன்னீராயிரம் பிரணவ ஜபம் செய்யவேண்டும். அப்போதுதான் அந்தப் பாவம் நீங்கிப் பரிசுத்தனாவான் என்கிறது பஸ்மஜாபால உபநிடம்.

இத்தகைய திருநீறு புனைந்த அடியவர் யாவராயினும் அவரைச் சிவமாகப் பாவித்து வணங்கும் பண்புடையவர் ஏனாதிநாத நாயனார். மெய்ப்பொருள் நாயனாரும், ஏனாதிநாத நாயனாரும் — திருநீற்றின் பெருமைக்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்தவர்கள்.

சோழ வேந்தர்கள் இமயமலை மீது புலிக்கொடி நாட்டியவர்கள்; புவி பரந்து புகழ் படைத்தவர்கள். அவர்களுடைய நாடு வளமை மிக்க சோணாடு. அத்திருநாடு சோழருடைய குளிர்ந்தமுத்து வெண்குடையின்நிழலில் குளிர்வது. அந் நாட்டிலே உள்ள பழமையான பதி எயினனூர்.

வேழக் கரும்பினொடு மென்கரும்பு
தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தானோங்கும்
தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியஅப்
பொற்பதியில்
ஈழக் குலச்சான்றோர் ஏனாதி நாதனார்,

எயினனூர் என்பது குடந்தைக்குத் தென்கிழக்கில் நான்கு மைலில் உள்ளது. இப்போது இது ஏனநல்லூர் என வழங்கப்படுகின்றது. ஏனாதி என்பது நாயனாரது சொந்தப் பெயரன்று. நாயன்மார்களிலேயே அநேகரது சொந்தப் பெயர் என்னவென்று தெரியவில்லை. ஏனாதி என்பது முன்னாளில் சேனாதிபதிக்குரிய பெயர். சேனாதிபதிக்கு ஏனாதிப்பட்டம் என்னும் ஆபரணத்தை நெற்றியில் அணியத் தருவார்கள். ஆகவே, ஏனாதி என்பது நாயனாருக்குப் பின்னர் வந்த பெயர்.

கரும்பிலே இரண்டு வகை. வேழக் கரும்பு என்பது ஒன்று; மென் கரும்பு என்பது மற்றொன்று. வேழக் கரும்பு பெரியது; மென்கரும்பு சிறியது. எயினனூரில் இந்த இரு வகையான கரும்பும் விளைகிறதாம். அவ்வூரின் மருங்கில் நெற்பயிர் வளர்ந்து ஓங்கி யிருக்கிறதாம். ஓங்கி வளர்ந்துள்ள அந் நெற்பயிரைக் கண்டு வெட்கித் தலைகுனிந்திருப்பது போல் இருக்கிறதாம் கரும்புப் பயிர். நெற்பயிர் பூக்கும்; காய்க்கும். கரும்பு பூக்கும்; காய்க்காது. குல ஸ்திரீகளுக்குக் குழந்தை பிறக்கும்; பொதுமகளுக்குக் குழந்தை பிறக்காது; பிறந்தாலும் பெயர் சொல்லாது. குலப் பெண் நெல்; விலைமகள் கரும்பு. குலப் பெண்ணைக் கண்டு பொதுமகள் வெட்கித் தலை குனிவது போல் கரும்பு வெட்கப் படுகிறதாம். இயற்கை வளம் மிக்க அப்பதியில் உள்ள மக்கள் செழிப்பாக வாழ்ந்து வந்தனர். அவர்களில் ஈழக் குலச் சான்றோர் மரபில் வந்தவர் ஏனாதி நாயனார். அவர் மிகுந்த சான்றாண்மை உள்ளவர். திருநீற்றின் பெருமையை நன்குணர்ந்த அவர், திருநீறு புனைந்தவர் யாவரேயாயினும் சிவமாகப் பாவித்து வணங்குவார்.

வாட்படைப் பயிற்சி அளிப்பது நாயனாரின் தொழில். அத் தொழிலில் அவருக்குச் சமானம் வேறு எவருமின்றிச் சிறந்து விளங்கினார். சிறந்த வாள் வலியும், தோள் வலியும் உடைய அவர் குழந்தை உள்ளமும் தழைந்த அன்பும், அஞ்சா நெஞ்சமும், பின்னடையாத வீரமும் உடையவராய்த் திகழ்ந்தார். அவர் அந்த ஊரில் வாட் படைப் பயிற்சிக் கூடம் அமைத்துக் காலையும், மாலையும் வாட் பயிற்சி அளித்து வந்தார். வாள் வித்தையைப் போதிப்பதன் மூலம் வரும் வருவாயையெல்லாம் மாலயன் காணாத மணிகண்டரது அடியார்களுக்குப் பயன்படுத்தி வந்தார்.

**வாளின் படைபயிற்றி**
**வந்து வளமெல்லாம்**
**நாளும் பெருவிருப்பால்**
**நண்ணும் கடப்பாட்டில்**
**தாளும் தடமுடியும்**
**காணாதார் தம்மையும் தொண்(டு)**
**ஆளும் பெருமான்**
**அடித்தொண்டர்க் காக்குவார்.**

ஏனாதிநாத நாயனார் பாடுபட்டதெல்லாம் அவரது வயிற்றுக்காக அன்று; எல்லாம் அடியார் பொருட்டே. அதனால் அவரை நண்பர் மட்டுமின்றிப் பகைவர்களும் போற்றிப் புகழ்ந்தார்கள். அத்தனை நன்மையுடையவர் ஏனாதிநாத நாயனார். யாரும் இகழாத வகையில் இனிது ஒழுகி வாழ்ந்தார் அவர்.



எல்லோருக்கும் இனிமையே செய்யும் கருணையுள்ளம் படைத்த அருளாளரைப் பகைக்கும் புல்லரும் உலகில் இருக்கின்றனர். தண்ணென்ற அமிர்த கிரணம் பொழியும் திங்களைக் கண்டு தாமரை குவியும். எல்லோருக்கும் இன்பத்தைத் தரும் பூரணச் சந்திரன் கள்வருக்கு வெறுப்பானவன். அதுபோல், பகைவருக்கும் நன்மை புரியும் அன்பராகிய நாயனாருக்கு அதிசூரன் என்பவன் பகைவனானான். (தொடரும்)

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்குகிறது, நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

**நியூயார்க்— தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைத் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி-- வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதமுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. மற்றும் 50கி. டியூப்களாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட்: 38, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்., போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பிஆர்.

*டிரேட் மார்க்

CMPH-2 TAM

## திமிங்கிலத்தின் வயிற்றிலே பெண்களின் அழகுப் பை!

சோவியத் திமிங்கில வேட்டைக் காரர்கள் பசிபிக் கடலில் வேட்டை யாடும்போது ஒரு திமிங்கிலத்தைக் கொன்றார்கள். அதன் வயிற்றைக் கீறிப் பார்க்கும்போது, அதில் பெண் களின் அழகுப் பையும், சிறிய பிளாஸ் டிக் காரும், யூ-டி-கோலோன் சீசா ஒன்றும் இருந்தன!

இவையெல்லாம் பசிபிக் கடல் ஆராய்ச்சிக் கழகத்தில் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. - ஏ. பி. என்



## இரட்டையன்

அவர் அமெரிக்காவில் உள்ள ஓர் ஊரில் போலீஸ்காரராகப் பணியாற்றி வந்தார். அதோடு அவர் மிருக வைத்தியரும்கூட. ஒரு நாள் நள்ளிரவு அவர் வீட்டில் டெலிபோன் மணி ஒலித்தது. அவரது மனைவி ரிஸீவரை எடுத்தாள்.

"தாமஸ் இருக்கிறாரா? அவரைச் சீக்கிரம் வரச் சொல்லுங்கள்!" என்று யாரோ ஒருவர் சொன்னார்.

"அவரை ஒரு போலீஸ்காரர் என்ற முறையில் அழைக்கிறீர்களா? அல்லது மிருக வைத்தியர் என்ற முறையில் வரச் சொல்கிறீர்களா?" என்று கேட்டாள் தாமஸின் மனைவி.

"இரண்டு விதமாகவும் அவர் வரவேண்டும். முதலில் திருடன் ஒருவனைக் கைது செய்தாக வேண்டும். இரண்டாவதாக எங்கள் வீட்டு நாயின் வாயைத் திறக்க மிருக வைத்தியர் என்ற ஹோதா வில் வர வேண்டும். அப்போதுதான் திருடனைக் கைது செய்ய முடியும். ஏனெனில் திருடனுடைய கால் நாயின் வாயில் அகப்பட்டுக் கொண்டிருக் கிறது!" -- தோ

## கனவை நாமே உண்டாக்கலாம்!

நாம் உறங்கும்போது நம்மைச் சுற்றி எழும் சில ஒலிகள் நமது மூளையின் ஒரு பகுதியை விழித்துக் கொள்ளச் செய்கின்றன. அப்போதுதான் நாம் கனவு காண்கிறோம்.

மூளையில் பதிவு செய்யப்பட்ட பழைய நிகழ்ச்சிகளும், ஒலியின் தொடர்பால் உண் டான நிகழ்ச்சிகளும் பின்னலிட்டுக் குழப்ப மாகவும் தெளிவில்லாமலும் கனவுகள் தோன்றுகின்றன.

தூங்கும் ஒருவனது காதில் ஏதேனும் ஒரு சம்பவத்தை அவன் விழித்துக் கொள்ளாத வகையில் அழுத்தமாகக் கூறினால், அவன் அதே சம்பவத்தைக் கனவு காணுவான். ஆமாம். கனவை நாமே உண்டாக்க முடியும்!

தகவல்: பி. வி. கிரி



## செடிகளுக்கு வெந்நீர் ஊற்று!

மரம், செடி, கொடிகளுக்கு வெந் நீர் ஊற்றலாம் என்றால் யாராவது நம்புவார்களா?

ஆனால் அவற்றுக்கு வெந்நீர் ஊற்று வது முற்றிலும் உண்மையாகும்.

சைபீரியாவில் செடிகளுக்கு வெந்நீர் தான் ஊற்றுவார்கள். பச்சைத் தண் ணீர் விட்டால் அது உடனே ஐஸ் கட்டி யாகி, செடிகளைப் பிடித்துக் கொண்டு விடும். அதனால் வெந்நீர் ஊற்றியே அந் நாட்டில் செடிகளை வளர்த்து வருகி றார்கள்! தகவல்: அலமேலுராமமூர்த்தி.

## "நாசகாரி நோஆ"

வடக்கெல்லையில் சீனர்களின் ஊடுருவல் என்றதும் 'தரைப் படை விரைப்பட்டும்" என்றார் அப்படைத் தலைவர். "ஏன் கப்பற் படையையும் அனுப்பலாமே" என்று அரிய ஆலோசனை வழங்கினார் ஓர் அரசியல்வாதி! இப்படி ஒரு கதை



வேடிக்கையாகக் கூறுவதுண்டு. எனினும், கப்பற் படையின் முக்கியத்துவத்தை மறப்ப தற்கில்லை நாம். நமது கப்பற் படை படிப்படியாக வளர்ந்து வருவதைக் காண் கிறோம். அத்துடன் அண்மையில் அமெ ரிக்கக் கப்பற்படையைச் சேர்ந்த ஒரு நாசகா ரிக் கப்பலைப் பார்க்கும் வாய்ப்பும் கிட்டியது சில பத்திரிகையாளர்களுக்கு. 'நோஆ' என்று பெயர் கொண்ட இந்த நாசகாரியின் ஒரு விசேஷம்: முதல் அமெரிக்க விண் வெளி வீரர் கிளென் தமது விண்வெளிப் பயணத்தை முடித்துக் கொண்டு பூமிக்கு வந்ததும் கடலிலிருந்து அவரை அவரது விண்வெளிக் கப்பலுடன் சேர்த்து மீட்ட பெருமை இக்கப்பலுக்கும் இதன் மாலுமி களுக்கும் உண்டு. "இன்று விண்வெளிப் பயணம் ஓரளவுக்குப் பழகிவிட்டது. எனினும், அன்று அம்முதல் முயற்சி வெற்றிபெறுமா என்று விளங்கியதல் லவா?" என்று கூறிப் பழைய நினைவில் இன்றும் பரபரப்படைகிறார்கள் இக்கப்பல் மாலுமிகள். சிறிய நாசகாரிதான் இது என்றாலும் எதிரிகளின் நீர்மூழ்கிக் கப்பல் களுக்குச் சிம்மசொப்பனமாக விளங்கும் ஆற்றல் படைத்ததாம்!

## புரியாத புதிர்



குழந்தை பிறந்தவுடனேயே மூச்சுவிடத் தொடங்குவது என்பது ஆச்சரியம். குழந்தையின் இரண்டாவது மூச்சிலிருந்து சுவாசமானது மூளையில் இருக்கும் ஒரு நரம்புக் கேந்திரத்தின் ஆட்சியின் கீழே நடைபெறுகிறது. ஆனால் அந்த முதல் மூச்சு? சிசு ஜனித்ததும், அது எந்தக் காரணத்தினால் தூண்டப் பெற்று, வாய் வழியாகக் காற்றை நுரையீரல்களுக்குள் இழுக்கிறது என்ற மனித மூளைக்கு எட்டாத பரம ரகசியம் பலருக்கும் புரியாத புதிராகவே இருந்து வருகிறது.

— இரா. அஞ்சலி

ஒருதடவை கலைவாணர் என். எஸ். கே. அவர்கள் உடல் நலமில்லாமல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தார். அப்பொழுது அவரைப் பார்க்க வந்த நண்பர் ஒருவர் பேச்சுக்கிடையே,- "உங்களுக்கு என்ன வயதாயிற்று?" எனக் கேட்டார்.



### நாற்பது வயதும் ஏழு வருடமும்

"எனக்கா, நாற்பது வயதும் ஏழு வருஷமுமாச்சு! ஆனால் நாற்பதே போதும், அதிக ஆசை எதற்கு என்று அதோடு ஸ்டாப் பண்ணிக் கொண்டேன்!" என்றார் கலைவாணர்.

— புவி. வேந்தன்

## விபத்துக்களைத் தவிர்க்க...

- குளிக்கும் அறையில் சோப்பைப் பெட்டியிலேயே வைக்கவும் - தரையில் விழுந்தால் தரையை வழவழப்பாக்கிக் கீழே தள்ளிவிட வகை செய்யும்.
- புடவைத் தலைப்பு - நீண்ட பின்னல் - ரிப்பன் இவைகளைத் தாற்காலிகமாக முடிந்துகொண்டே சமையலில் ஈடுபட வேண்டும்.
- ஒட்டு வீடாக இருந்தால் அதிகாலையில் தேள் வந்திருக்கலாம் - விழிப்புடன் கவனிக்க.
- கத்தியை யாருக்காவது கொடுக்க நேர்ந்தால் பிடியை நீட்டவும்.
- கண்ணாடிப் பொருள்கள் கைதவறி உடைந்தால் சாணத்தில் ஒத்தினால் சிறு துகள்கள் அகலும்.
- அலமாரிக் கதவுகளையும் - இழுப்பறைகளையும் மூடி வைக்கவும் - முழங்கையில் பட்டால் உயிர்போகும்.
- பிரஷர் குக்கர் உபயோகிப்பவர் மரையை மட்டும் திருகி எடுத்துவிட்டு அடைத்த காற்று சீறி வெளியேறிய பிறகே மூடியைத் திறக்க வேண்டும்.

— வா. கோ. பா.





ஆராய்ச்சிப் பரிசு

நமது ஏற்றுமதி வர்த்தகத்தில் முக்கியமான தொன்று தோல் - தோலினாலான பொருள்கள். ஏராளமான காலணிகளை ஏற்றுமதி செய்கிறது நம் நாடு. ஆயினும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு நாம் ஏற்றுமதி செய்யும் காலணிகளில் அவர்கள் ஒரு முக்கிய குறையைக் கண்டு வந்தனர். அது இந்தக் காலணிகள் ஈரத்தைப் புறக்கணிக்கவில்லை; மாறாக நீரை உறிஞ்சிக் கொள்கின்றன என்பது தான். இதனால் ருஷ்யாவிலிருந்து ஆயிரக் கணக்கான காலணிகள் வேண்டாம் எனத் திருப்பி அனுப்பப்பட்டனவாம் நமக்கு. இந்தக் குறையை நீக்கத் தீவிர ஆராய்ச்சி செய்து வெற்றி கண்டிருக்கிறார் திரு பழ. முத்தையா. சென்னை அடையாற்றில் உள்ள மத்திய தோல் ஆராய்ச்சி நிலையத்தில் பணியாற்றும் இவர் கண்டுபிடித்துள்ள முறைப்படி பதப்படுத்தப்பட்ட தோல் நீரைப் புறக்கணித்து விடுகிறது. ஆகவே, காலணிகள் சீக்கிரம் வீணாவதில்லை. இம்முறையை அமுல் நடத்த அயல் நாடுகளிலிருந்து தருவிக்கப்பட வேண்டிய ரசாயனப் பொருள்கள் ஏதும் இல்லை என்பதும் குறிப்பிடத் தக்கது. உள்நாட்டில் கிடைக்கும் அலுமினியம் சல்பேட் இதற்குப் போதுமானது. ஏற்றுமதி வர்த்தகத்துக்குத் தமது ஆராய்ச்சி மூலம் உதவியுள்ள திரு முத்தையாவுக்கு மத்திய அரசு ரூ. 1000 சன்மானம் வழங்கிப் பாராட்டியுள்ளது. நாமும் வாழ்த்துகிறோம்.

# இருமலை நிறுத்த
# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள் சிவப்பு லேபில்





விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பஸ்மளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வாராமல் தடுக்கும் சக்தியை யூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால், சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப்பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக்குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் மீண்டும் வாராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல்,
காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும்
சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர் - ஹிந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்.




ஒரே ஒரு ஊரிலே ஒரு ராஜா இருந்தான். அவன் ரொம்ப ரொம்ப நல்லவன். வீட்டு வாசல்ல அவன் ஒரு காலிங் பெல் வைத்திருந்தான். யாராவது அவனிடம் கஷ்டங்களைச் சொல்லணும்னு வீட்டுக்கு வந்து 'டிர்ரிங்...'னு அந்தப் பெல்லை அழுத்தணும். ராஜா வந்து என்ன வேணும்னு கேட்டு உடனே அவங்களோட கஷ்டங்களைத் தீர்த்து வைப்பான்.

இப்படி இருக்கும்போது ஒரு நாள் காலம்பற ராஜா உட்லண்ட்ஸ்—ஹோட்டலிலேயிருந்து வாங்கியாந்த இட்டிலி, மசால்தோசை சாப்பிடும்போது டிர்ரிங்...னு மணிச் சத்தம் கேட்டுது. ராஜா அவசரம் அவசரமாகச் சாம்பார்லே நனைஞ்ச கையை நீக்கிவிட்டு வாசல்லே வந்து பார்த்தா ஒரு மாடு அழுதுண்டே நின்னுக்கிட்டு இருந்தது. ''மாடே.... மாடே... உனக்கு என்ன கஷ்டம்....''னு ராஜா கேட்டான். உடனே அந்த மாடு, ''உன் பிள்ளை வேகமா அவன் பியட்டை ஓட்டி என் கன்றுக்குட்டி மேல் ஏற்றிக் கொன்னுட்டான்... எனக்கு அழுகை அழுகையா வர்றது. எனக்கு அது ஒரே கன்னுக்குட்டிதான் இருந்தது'' என்றது. உடனே ராஜா கோச்சுண்டு, ''அந்தப் பய காலங்காத்தாலேயே கார் எடுத்துண்டு சுத்தப் போயிட்டான். இனிமே சாயங்காலம்தான் வருவான். நீயும் சாயங்காலமே வா. அந்தப் பயலை நன்னா கவனிச்சுக்கறேன்'' என்று சொல்லி மாட்டை அனுப்பிச்சுட்டான்.

சாயங்காலமா ராஜா ஹாலில் உட்கார்ந்துண்டு ரேடியோ சிலோன் கேட்டுண்டிருந்தான். அவனோட பிள்ளை டென்னிஸாடி விட்டு அப்போதுதான் வீட்டுக்கு விசிலடிச்சுண்டே வந்தான். அவன் மட்டையைக் கையில் ஸ்டைலாகப் பிடித்துக் கொண்டே மாடிப்படி ஏறப் போனான். ராஜா அவனைக் கூப்பிட்டு, ''ஏய்... நீ வேகமா உன் பியட் காரை ஓட்டி ஒரு கன்றுக்குட்டி மேல் ஏற்றி அதைக் கொன்னுட்டியே.... அந்த மாடு வந்திருக்கு. என்ன சொல்றே?'' என்று கேட்டான். அதற்கு அவன் பையன், ''நான் என்னப்பா, பண்றது? நான் அப்பவே சொன்னேன். டி. வி. எஸ்.ஸிலே காரை ரிப்பேர் பண்ணலாம்னு. நீதான் சொன்னே, கந்தசாமிக்கிட்டேயே ரிப்பேர் பண்ணிக்கோன்னு. இப்போ பிரேக் பிடிக்காமல் கார் ஏறிடுத்து. நான் என்ன பண்றது?'' என்று கத்தினான்.

ராஜாவுக்குக் கோபம் மூக்குக்கு மேல் வந்து, ''அப்படியா சேதி...வா, கீழே படுத்துக்கோ. உன் மேலே என்னோட இம்பாலாவை ஏத்தறேன். அப்போத்தான் உனக்குப் புத்தி வரும்'' என்றான். பையனைக் கீழே படுக்க வைத்து ராஜாவே இம்பாலாவிலே ஏறி 'ஸ்டார்ட்' செய்து கிளப்பினான். காரே கிளம்பலே. உடனே ராஜா இஞ்சினை நிறுத்திக் கீழே இறங்கிப் பார்த்தால் சாமி.... கடவுளே பின் பம்பரை இழுத்துண்டு நிக்கறது. உடனே ராஜா உம்மாச்சியைப் பார்த்து, ''சாமி.... என் பிள்ளை கெட்டவன். அவன் ஒரு கன்றுக்குட்டி மேலே காரேத்திக் கொன்னுட்டான். நீ உடு.... அவன் மேலே நான் காரேத்திக் கொன்னுடறேன்''ன்னு சொன்னான். உம்மாச்சியும் ராஜா நல்லவன்னு புரிஞ்சிண்டு ராஜாப் பையனை மன்னிச்சுக் கன்றுக்குட்டிக்கு உயிர் கொடுத்துடுத்து. ராஜாவைப் பார்த்து ''இனிமே நீதான் 'புது நீதி சோழன்''' என்று சொல்லிவிட்டு மறைஞ்சு போயிடுத்து. கன்றுக்குட்டியும் அம்பே.... அம்பே......ன்னு கத்திண்டு அம்மா மாடுகிட்டே போயிடுத்து. ராஜாவும் பிள்ளையும் சந்தோஷமா அதே இம்பாலாவிலே ஏறிண்டு அசோகா ஹோட்டலுக்குப் போனாங்க.

(ஒரு பெரிய மனிதரின் டிரைவர் முதலாளியின் ஐந்து வயதுக் குழந்தைக்குச் சொன்ன கதை)

"என்ன யிஸ்டர்! இவ்வளவு சீக்கிரமாய் வந்து விட்டீர்கள்? இன்னிக்கு வாலிபால் ஆட்டம் கிடையாதோ?" என்று தன் கணவனை வரவேற்றாள் புஷ்பா.

"இனிமேல் தினமும் சீக்கிரம் வந்துவிடுவேன்" என்றான் வாசு.

"ஏன், கைகால்கள் எல்லாம் நன்றாகத் தானே இருக்கு?"

"அதுக்கெல்லாம் ஒண்ணும் வந்துவிடவில்லை."

"பின்னே என்ன திடீரென்று வந்தது, வாலிபால் ஆட்டத்தின் மேல் கோபம்?"

"இன்னிக்கு ஆட்டத்திலே எனக்கும் மானேஜருக்கும் தகராறு. நான் கத்த அவர் கத்த இருவரும் கை கலக்காத குறை!"

"என்ன? கம்பெனி மானேஜர்கூடவா நீங்கள் சண்டை போட்டீர்கள்?" என்று வாயைப் பிளந்தாள் புஷ்பா.

"யாராயிருந்தால் என்னவாம்? ஆட்டத்தில் 'பௌல்' என்றால் 'பௌல்'தான். நல்ல வேளை! நாலு பேர்கள் சேர்ந்து என்னை இழுத்துக் கொண்டு போய் விட்டார்கள்!"

"போதும், போதும். பேசாதீர்கள். ஏதோ ஆட்டத்தில் 'பௌலா'ம். அதனால் மானேஜருடன் சண்டையாம். நாளைக்கு உங்கள் பிரமோஷன் இந்தச் சண்டையினால் என்னவாகப் போகிறதோ?"

'சுரீர்' என்று சாட்டையால் அடித்த மாதிரி இருந்தது வாசுவுக்கு. 'சட், புஷ்பாவுக்கு இருக்கும் அறிவுகூட நம்மிடம் இருக்கவில்லையே? கோபம் வந்தால் கண், மூக்குத் தெரியமாட்டேனென்கிறது!' என்று ஒரு மனம் கூறியது. அதே சமயத்தில் இன்னொரு மனம் 'மானேஜர் என்றால் ஆபீஸ் கட்டடத்தோடு. ஆட்டத்தில் இறங்கிவிட்டால் மானேஜராவது குமாஸ்தாவாவது? எல்லோரும் ஆட்டத்தின் சட்டத்துக்குட்பட்டுத்தான் நடக்க வேண்டும். நாம் செய்ததுதான் சரி. நம்ம கட்சியிலே இருந்து மானேஜருடன் சேர்ந்து கொண்டு என்னிடமே சண்டைக்கு வந்தானே சங்கரன், அவனைப் போலவா இருப்பது? சங்கரன் சுத்த அயோக்கியன். சமயத்துக்குத் தகுந்த வேஷம் போடுவதில் அவனை மிஞ்ச ஒருவராலும் முடியாது. காக்காய் பிடிக்கிறான், காக்காய்!' என்று கர்ஜித்தது.

காப்பி சாப்பிட்டு விட்டுத் தன் அறையில் போய் உட்கார்ந்த வாசுவின் எதிரே அன்று மாலை நடந்த சம்பவம் தோன்றியது.

வாசு வேலை செய்து கொண்டிருக்கும் கம்பெனியில் அவனை அறியாதவர்களே கிடையாது என்று திட்டமாகச் சொல்லலாம். எல்லோருக்கும் அவனைத் தெரியும். எல்லோருடனும் சரளமாய்ப் பழகுவான். எப்பொழுதும் சிரித்த முகம். இளம் வயசு. அழகான உருவம். அந்தக் கம்பெனியின் மானேஜர்கூட வாசுவை ஒரு நாள் காணாவிடில் மறு நாள் அவனைத் தனியாகப் பார்த்து, "என்ன உடம்புக்கு?" என்று அன்போடு விசாரிப்பார்.

அப்பேர்ப்பட்ட மானேஜருடன்தான் அவன் இன்று சண்டை போட்டுக் கொண்டு விட்டான்!

வாசு எப்போதும் விளையாட்டுப் பிரியன். கல்லூரியில் அவன் படித்துக் கொண்டிருந்த போது எல்லா ஆட்டத்திலும் அவன்தான் முதல்! விடிந்தால் பரீட்சை இருக்கும். ஆனால் முதல் நாள் மாலை ஏழு மணி வரை கிரிக்கெட் என்ன, பூப்பந்தாட்டம் என்ன என்று எங்கேயாவது விளையாடிவிட்டு உடம்



# விளையாட்டும் விளையாட்டும்!

ரா. கோ.

மேல்லாம் வியர்க்க விறுவிறுக்க வீட்டுக்கு வருவான். அவன் அறை முழுதும் கிரிக்கெட் மட்டையும், பந்தும் மற்ற சாமான்களுமாகத்தான் காணப்படும். ஆனால் பரீட்சையில் மாத்திரம் எப்படியோ பாஸ் செய்து விடுவான். யார் செய்த புண்ணியமோ?

படிப்பு முடிந்தவுடன் தன் மனம் பிடித்த புஷ்பாவின் கரம் பற்றினன். புஷ்பாவின் அதிர்ஷ்டத்தாலோ அல்லது அவன் அதிர்ஷ்டத்தாலோ கல்யாணமான மறு வாரமே அவனுக்கு ஒரு வேலை கிடைத்தது !

வாசு அக்கம்பெனியில் போய்ச் சேர்ந்ததிலிருந்துதான் அந்த ஆபீஸிலே ஒரு மாறுதல் ஏற்பட்டது! அது வரை அந்தக் கம்பெனியில் உள்ளவர்கள் எல்லாம் மணி ஐந்து அடித்தவுடன் கோட்டை மாட்டிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டு விடுவார்கள். வாசு இதைக் கவனித்தான்! அவனுக்கு மாலை வீட்டில் வெறுமனே தன் மனைவியின் எதிரில் போய் உட்காரப் பிடிக்கவில்லை! ஏனெனில், அவன் புஷ்பாவுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தான். அதன்படி ஒவ்வோர் ஞாயிற்றுக் கிழமையும் அவளை எங்கேயாவது அழைத்துச் செல்ல வேண்டும். மற்ற நாட்களில் அவனுக்கு ஒரு தொந்தர



வும் கொடுப்பதில்லை என்று அவன் வாக்களித்திருந்தான். தவிர தினம் போவதற்குப் பணத்துக்கு எங்கேபோவான்?

அதனால் அவன் மூளையில் ஒரு 'ஐடியா' தோன்றியது. தன் ஆபீஸில் ஒரு 'கிளப்' ஆரம்பித்தால் என்ன ? எல்லோரிடமிருந்து மாதாமாதம் ஏதோ கொஞ்சம் பணம் வசூலிக்க வேண்டும்; அந்தப் பணத்திலிருந்து , புட்பால், வாலிபால், கேரம் போர்டு என்று இப்படி வாங்கிப் போட்டு விட்டால் எல்லோரும் விளையாடலாம். உடம்புக்கும் தெம்பு. மறு நாள் முதற்கொண்டு தன் வேலையை ஆரம்பித்தான். வாசுவின் பக்கம் எப்பொழுதுமே வெற்றி தான்! 'விறு 'விறு' வென்று ஆட்கள் சேர்ந்தார்கள். பலவகை ஆட்டத்தின் சாமான்கள் எல்லாம் வாங்கினன். ஆபீஸின் எதிரே மண்டிக் கிடந்த புல்மேட்டைத் தன் சகாக்களுடன் சேர்ந்து வெட்டிப் போட்டான். மணல் கொண்டு வந்து போட்டான். ஆபீஸில் ஓர் அறையை ஒழித்து அதை விளையாட்டு அறை ஆக்கினன்.

ஆபீஸில் உள்ள முக்கால்வாசிப் பேர்கள் 'கிளப்'பில் அங்கத்தினர்களாகச் சேர்ந்து விட்டனர்! ஒரு நாள் மாலை ஆபீஸ் மானேஜர் தம் மாதச் சந்தாவை வாசுவிடம் கொடுத்து விட்டு அவரும் ஓர் அங்கத்தினராகச் சேர்ந்த போது ஆபீஸில் உள்ள அத்தனை பேருக்கும் ஒரு 'ஷாக்' !

"மிஸ்டர் வாசு! நீங்கள் பெரிய ஆள், ஸார்! வந்த ஒரு மாதத்திலே எல்லோரையும் உங்கள் வலையில் இழுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறீர்களே? பலே, பலே!" என்று மற்ற சகாக்கள் கூறும்போது வாசு இவ்வுலகத்திலே இருக்க மாட்டான் !

இப்பொழுதெல்லாம் மாலை மணி எப்பொழுது ஐந்து அடிக்கும் என்றுதான் எல்லோரும் காத்துக் கொண்டிருப்பார்கள். ஐந்து அடித்ததோ இல்லையோ எல்லோரும் சட்டையைக் கழற்றிவிட்டு வாலிபால் ஆட்டத்தில் இறங்கி விடுவார்கள்!

அக்கம்பெனியின் மானேஜருக்கு அதிகம் போனால் முப்பத்தைந்து வயதுக்கு மேல் இருக்காது. அவருக்கு வாசுவை முதன் முதலாகப் பார்த்ததிலிருந்தே ரொம்பவும் பிடித்துவிட்டது. சூடிகையான பையன் அவன் என்று எண்ணிக் கொண்டார்.

விளையாட்டில் எப்படியோ அப்படியே வேலையிலும் கண்ணாக இருந்தான். காலை பத்து மணியிலிருந்து ஐந்து மணி வரையிலே வேலையில் ஒன்றிப் போய்விடுவான். இதனால் அவன்மேல் மானேஜருக்கு மதிப்பு இன்னும் அதிகரித்தது எனலாம்.

அவன் 'சோஷியல் கிளப்' ஆரம்பித்து ஒரு வருஷம் பூர்த்தியானது. ஆண்டுவிழாவை அவன் சிறப்பாகக் கொண்டாட விரும்பினான். எல்லோரிடமும் விசேஷமாகப் பணம் வசூலித்தான். ஒரு தேநீர் விருந்துக்கு ஏற்பாடு செய்தான். எல்லோருக்கும் அழைப்பிதழ் கொடுத்தான். எல்லோரும் அவரவர் மனைவிமார்கள் குழந்தைகள் என்று எல்லோரையும் அழைத்துக் கொண்டு வந்திருந்தார்கள். வாசுவும் புஷ்பாவை அழைத்து வந்திருந்தான். 'ஆஹா! என்ன பொருத்தமான ஜோடி!' என்று எல்லோரும் வியந்தனர். மானேஜர் தான் தலைமை தாங்கினார். அவர் தம் பிரசங்கத்தில் "வாசுதேவன் நம்ம கம்பெனியில் சேர்ந்ததிலிருந்து எவ்வளவு மாறுதல்களைச் செய்துவிட்டார்! முன்பெல்லாம் ஆபீஸ் விட்டதும் வீட்டுக்குப் போய்ச் சோம்பிக் கிடப்போம். இப்பொழுதெல்லாம் நன்றாக ஓடியாடி விளையாடுவதனால் நமக்கு நல்ல பசி எடுக்கிறது. வீட்டுக்குப் போய் நன்றாகச் சாப்பிடுகிறோம். பின்பு தூக்கம் என்ன ஆனந்தமாய் வருகிறது. தெரியுமா ? நான் எவ்வளவு பருத்து விட்டேன் இன்று! (கரகோஷம்) இவற்றுக்கெல்லாம் காரணம் நம்ம வாசுதான்! அதனால் உங்கள் சார்பாகவும் உங்கள் மனைவிமார்களின் சார்பாகவும் இதோ இந்த மாலையை நான் வாசுவுக்கு அணிவிக்கிறேன்" என்றபடி தம் பையிலிருந்து ஒரு ஜிகினா மாலையை எடுத்து வாசுவின் கழுத்தில் மானேஜர் போட்ட போது கைதட்டல்கள் எழுந்தன.

**புஷ்பாவின் உடலெல்லாம் புல்லரித்தது.**

மேலும் வருஷங்கள் இரண்டு உருண்டோடிச் சென்றன. அந்தக் கம்பெனியிலிருந்த 'அக்கௌண்டண்டு' ஒருவர் 'ரிடையர்' ஆகிப் போனார். அந்தப் பதவி யாருக்கு என்ற கேள்வி ஆபீஸ் முழுதும் எதிரொலித்தது. எல்லோரும் வாசுவினிடத்தில் வந்து "மிஸ்டர் வாசு, அடுத்த அக்கௌண்டண்ட் நீங்கள்தான்" என்றனர். ஆபீஸ் பியூன்கள் கூட 'அக்கௌண்டண்ட் சார்' என்று அன்போடு அழைத்தார்கள்!

இந்தச் சமயத்தில்தான் அந்தச் சம்பவம் நடந்து ஆபீசை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது.

என்றும் போல் அன்றும் மாலை மணி ஐந்து அடித்தவுடன் எல்லோரும் வாலிபால் கோதாவில் இறங்கினர். மானேஜரும் வழக்கப்படி பனியனுடன் வந்தார். வாசுவும் மானேஜரும் அன்று எதிர் எதிர்க் கட்சி. ஆட்டம் தொடங்கியது. முதல் ஆட்டம் மானேஜர் பக்கம்தான் வெற்றி. மூன்று ஆட்டங்கள் தினமும் நடக்கும். யார் மூன்று ஆட்டங்களில் இரண்டு ஆட்டங்கள் வெற்றி அடைகிறார்களோ, அவர்களே வெற்றியடைவார்கள். இரண்டாவது ஆட்டத்தில் வாசுவின் பக்கம் வெற்றி. கடைசி ஆட்டம் நடந்து கொண்டிருந்தது. இரு கட்சிகளும் சமமாகப் பாய்ண்ட் எடுத்துக் கொண்டு வந்தன! கடைசியில் ஒரு பாயிண்டில் வந்து நின்றது. அந்தப் பாயிண்டை வாசு எடுத்து விட்டால் அவன் பக்கம்தான் ஜயம்! மூச்சைப் பிடித்துப் பந்தை வலது கைமுட்டியினால் இழுத்து அடித்து எதிர்ப்பக்கம் அனுப்பினான். எப்போதும் வாசுவிடமிருந்து வரும் பந்தை எதிர்க்க ஒருவருமிருப்பதில்லை. எல்லோரும் விட்டுவிட்டனர். அப்பந்தும் ஓர் இடத்தில் போய் விழுந்தது. மறுவினாடி வாசு 'ஹோ' என்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்தான்.

"நோ, நோ! இது 'அவுட்'டில் விழுந்தது" என்று மானேஜர் ஆட்சேபித்தார்.

"இல்லை, மைதானத்துக்குள்ளேதான் விழுந்தது!" என்றான் வாசு.

"இதோ வந்து பார்" என்றபடி மானேஜர் ஓர் இடத்தைக் காண்பித்தார்.

உடனே வாசு அவ்விடத்துக்கு ஓடிப்போய்ப் பார்த்தான். "ஸார், இது போன ஆட்டத்தில் விழுந்தது. இதோ இப்போது விழுந்த இடம் இங்கே இருக்கிறது" என்றபடி அவன் மற்றோரிடத்தைக் காண்பித்தான்.

இதற்குள் வாசுவுடன் வேலை பார்த்துக் கொண்டிருக்கும் சங்கரன் ஓடி வந்தான். அவன் வாசுவின் கட்சியில் இருந்தபோதிலும் மானேஜருக்காகப் பரிந்து பேச ஆரம்பித்தான்.

"மிஸ்டர் வாசு, அவர் சொல்வதுதான் சரி. அது அவுட் பந்து தான்" என்றான்.

"மானேஜர் என்பதற்காக அவர் பக்கம் பேசுகிறாயா? உனக்கு ரோஷமில்லை?" என்று கத்தினான் வாசு.

'சரி, இதற்கு மேல் விட்டால் ஆபத்து' என்பதை அறிந்த மற்ற சகாக்கள் அதனைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றுவிட்டனர். மானேஜரும் சட்டையைத் தோளில் மாட்டிக் கொண்டு கோபத்தில் 'படீரென்று

காரின் கதவை அடித்த வண்ணம் அவ்விடத்தை விட்டுப் போய் விட்டார்.

''வாசு! இந்த ஓர் அற்ப விஷயத்துக்காக இவ்வளவு தூரம் சண்டை போட்டிருக்க வேண்டாம்'' என்றான் ஒருவன்.

''ஆமாம், அதுவும் உனக்குப் பிரமோஷன் ஆகப் போகிற சமயத்தில் அவருடன் பகைத்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை.''

பலர் பலவிதமாகச் சொன்னார்கள். ஒருவனாவது வாசுவின் பக்கம் பேச வரவில்லை.

வீட்டின் படி ஏறுத முன்பேயே புஷ்பாவும் இடித்துக் காட்டவே, அவன் மனம் உண்மையில் உடைந்து விட்டது. 'சீச்சீ! இனி மேல் இந்த ஆட்டத்துக்குப் போகவே கூடாது' என்று நிர்மானித்துக் கொண்டான்.

ஒரு வாரம் சென்றிருக்கும். இந்த ஒரு வாரத்தில் அவன் ஒரு நாள் கூட வாலிபால் ஆடச் செல்லவில்லை. அவனுக்கு ஆபீஸ் சிப்பந்திகளிடத்தில் ஒரு வெறுப்பு ஏற்பட்டு விட்டதென்றேகூடச் சொல்லலாம். அதனால் அவன் மற்றவர்களிடத்தில் பேசுவதைக்கூட நிறுத்திக் கொண்டான்.

அன்று அவன் ஆபீஸ் சென்று ஒரு மணி சென்றிருக்கும். எல்லோரும் அவரவர் வேலையில் மும்முரமாய் ஈடுபட்டிருந்தனர். அந்தச் சமயத்தில் மானேஜர் தம் அறையிலிருந்து வெளிப்பட்டு ஒரு முறை இலேசாகக் கனைத்தார். உடனே எல்லோரும் மரியாதையுடன் எழுந்து நின்றனர். வாசுகூட வேண்டாவெறுப்பாக எழுந்து நின்றான். ''நம்ம ஆபீஸில் அடுத்த அக்கௌண்டண்ட் யார் என்று அறிய நீங்கள் எல்லோரும் ஆவலாக இருப்பீர்கள்'' என்றதும், அங்குள்ள அத்தனை பேர் மனத்திலும் வாசுவின் உருவம்தான் நிழலாடியது.

''கடந்த ஒரு வாரமாக நான் யோசனை செய்து வந்த முடிவில்...'' வாசுவைக் கடைக்கண்ணால் நோக்கினார் மானேஜர். மேஜையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் அவன்.

எல்லோரும் மானேஜரின் வாயிலிருந்து என்ன வரப் போகிறது என்பதை அறிய ஆவலாக இருந்தனர். ''நம்ம அடுத்த அக்கௌண்டண்ட் இனி நாளையிலிருந்து மிஸ்டர் சங்கரன். நாளையிலிருந்து சங்கரன் வேலையை ஒத்துக்கொள்ளலாம்'' என்று சொல்லி விட்டு விர்ரென்று போய் விட்டார் மானேஜர்.

வாசுவின் உடம்பில் உள்ள இரத்தம் முழுதும் உறைந்துவிட்ட மாதிரி அப்படியே கல்லாய்ச் சமைந்து நின்று விட்டான். 'சட், இவரைப் போய்ப் பண்புள்ளவர் என்று எண்ணினோமே, சொந்தப் பகைக்காகப் பழி வாங்கிவிட்டாரே! இவரும் ஒரு மனிதரா?'' மறு விநாடி ஏதோ ஒன்று உந்தித் தள்ள ஒரு கால் கடிதாசில் தன் ராஜிநாமாவை மானேஜரிடம் வீசிவிட்டு அவர் பதிலையும் எதிர்பார்க்காமல் வெளியே வந்துவிட்டான்.

''புஷ்பா! உத்தியோகம் போச்சு. இனி மேல் வேறு உத்தியோகம்தான் பார்க்க வேண்டும்'' என்றான் வாசு புஷ்பாவிடம்.

''என்ன? உத்தியோகம் போச்சா?''

''ஆமாம். ராஜிநாமா செய்துவிட்டேன்!'' என்ற அவன் அன்று நடந்ததை அவளிடம் சொன்னான்.

''உத்தியோகத்தில் உயர்வு கிடைக்கவில்லை என்று யாராவது உத்தியோகத்தை ராஜிநாமாச் செய்வார்களா? நாளையிலிருந்து சாப்பாட்டுக்கு வழி?'' என்று புலம்ப ஆரம்பித்துவிட்டாள் புஷ்பா.

''போதும், போதும். நீ வேறு அழ ஆரம்பிக்காதே. என்னைத் தனியே விட்டுத் தொலை'' என்று கத்தினான்.

ஒரு வாரம் வரை வாசு பித்துப் பிடித்தாற்போல் உட்கார்ந்திருந்தான். வெளியே போகவே பிடிக்கவில்லை. தான் செய்தது சரியா என்று தன்னைத் தானே போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தான்.

பல நாட்களுக்குப் பிறகு அன்று வெளியே கிளம்பத் தன்னை ஆயத்தம் செய்து கொண்டிருந்தான் வாசு. அந்தச் சமயத்தில் ''ஸார், போஸ்ட்'' என்றபடி ஒரு கவரை வீசிவிட்டுப் போனார் தபால்காரர்.

அது அவன் ஆபீஸிலிருந்து வந்திருக்கிறது என்பதற்கு அடையாளமாக அதன் மேல் ஆபீஸின் பெயர் அச்சிடப்பட்டிருந்தது. கவரை அவசரமாகப் பிரித்துப் படிக்கலானான்.

''அன்புள்ள வாசு,

உன்னை நான் வயது வந்த ஆண்பிள்ளை என்று நினைத்தேன். நீ இன்னும் கல்லூரி மாணவனாகத்தான் இருக்கிறாய் என்பதை உன் ராஜிநாமாக் கடிதம் நிரூபித்து விட்டது. உனக்கு ரோஷம் அதிகம்.

என்னுடைய அடுத்த பிளான் என்ன என்பதை நம் தலைமை ஆபீஸிலிருந்து பதில் வரும்வரை எப்படித் தெரிவிக்க இயலும்? திடுக்கிடாதே. கேள். என்னைப் பம்பாய் ஆபீஸுக்கு அடுத்த மாதத்திலிருந்து மாற்றிவிட்டார்கள். அதோடு அடுத்த மானேஜரை நியமிக்கும் பொறுப்பையும் எனக்கே அளித்திருக்கிறார்கள். அதற்கு ஏற்ற ஆள் உன்னைத் தவிர வேறு யார் இந்த ஆபீஸில்? அப்படியிருக்க உன்னை அக்கௌண்டண்டாக நியமித்து விட்டால் சங்கரனையா மானேஜராக நியமிப்பது? இதை அறிந்துகொள்ளாமல் நீ ராஜிநாமா செய்துவிட்டாய். அதைப் பற்றி ஒருவரிடமும் நான் மூச்சு விடவில்லை. எல்லோரிடமும் நீ லீவில் இருப்பதாகச் சொல்லியிருக்கிறேன். உன் ராஜிநாமாக் கடிதம் மறு விநாடியே குப்பைக் கூடைக்குப் போய்விட்டது. உடனே ஆபீசுக்கு வரவும்.

இப்படிக்கு

கிருஷ்ணா (மானேஜர்)

பின் குறிப்பு: ''நீ அன்று அடித்த பந்து 'ரைட் பால்'தான். நான் மானேஜர் என்பதற்காக விட்டுக் கொடுத்துவிடுவாயோ என்பதைச் சோதிக்கத்தான் ஒரு பரீக்ஷை வைத்தேன். நீ அதில் தேறிவிட்டாய்!''

இந்தக் கடிதத்தைப் படித்த வாசு மூச்சு வாங்க ''புஷ்பா, புஷ்பா'' என்று கத்தினான்.

''பார், இந்தக் கடிதத்தை'' என்று அவளிடம் கடிதத்தை நீட்டினான்.

ஒரேமூச்சில் கடிதத்தைப் படித்த அவள் ''இப்பேர்ப்பட்டவரிடமா போய்ச் சண்டை போட்டீர்கள்?'' என்றாள். ''அவர் இனிமேல் என் தெய்வம்!'' என்ற வாசுவை மலர்ந்த முகத்துடன் நோக்கினாள் புஷ்பா.

# வெற்றித்திருநகர்

## அகிலன்

### அத்தியாயம் இருபத்திரண்டு

## எதிர்ப்பட்ட சோதனைகள்

**சா**ளுவ நரசிம்மர் போர் முரசு கொட்டி விட்டார். சோழ நாடு விஜய நகரத்திலிருந்து பிரிந்து தனியாட்சி பெற்றுவிட்டதாகச் சோழ நாடெங்கும் முரசுகள் முழங்கப்பட்டன. சாளுவரின் அதிகாரிகளும் படைத் தலைவர்களும் அவரது மாளிகையில் வந்து கூடினார்கள்.

''கிருஷ்ண தேவராயருக்குப் பிறகு விஜயநகர சாம்ராஜ்யம் சரிந்துகொண்டு வருகிறது. அதைக் கைப்பற்றி அழிப்பதற்குப் பாமினி சுல்தான்கள் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படி அவர்கள் கைப்பற்றி விட்டால், தமிழ்நாடும் பாமினி சுல்தான்களுக்கு அடிமையாகி விடும். அதிலிருந்து தப்புவதற்குத்தான் நாம் இப்போதே தனி ஆட்சி ஏற்படுத்துகிறோம்!'' என்று தமது அதிகாரிகள் நம்பும்படியான ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறினார் சாளுவ நரசிம்மர்.

சாளுவர் விஜயநகரத்தில் அமைச்சராக இருந்தவராதலால், அவருக்குப் பல செய்திகள் தெரிந்திருக்கக் கூடுமென்றும்,

அவர் கூறுவதெல்லாம் உண்மையென்றும் பலர் நம்பினார்கள்.

அவர் தமது திட்டங்களை வெளியிட்டார்:

''நாம் தனியாட்சி ஏற்படுத்தினால் விஜய நகரம் நம்மீது பாயத்தான் செய்யும். விஜயநகரத்தின் கையாளான விசுவநாதனைத் தூண்டிவிட்டு அவர்கள் நம்முடைய உரிமை களைப் பறிக்க முயல்வார்கள். ஆகவே விசுவநாதனை ஒழித்துக் கட்டும் வரையில் நம்முடைய உரிமை இங்கே நிலைக்காது. பாண்டிய நாட்டுக்குள்ளாகவே விசுவநாத னுக்குப் பகைவர்கள் இருக்கிறார்கள். கம்பத் தில் வாணாதிராயரும், பரமக்குடியில் தும் பிச்சி நாயக்கரும், கயத்தாற்றில் பஞ்ச பாண் டியர்களும் விசுவநாதனின் பாளையக்காரர் களாக இருக்க மறுத்து விட்டார்கள். அவர் களையும் நாம் தூண்டிவிட்டுச் சேர நாட்டு உதயமார்த்தாண்டனையும் நம்மோடு சேர்த் துக்கொள்ள வேண்டும். தெற்கே விசுவ நாதனை நாம் தீர்த்துக் கட்டிவிட்டால், வடக்கே விஜயநகரத்தின் வேகம் தானாகவே அடங்கி விடும்!''

சாளுவரின் திட்டப்படியே மளமளவென்று செயல்களும் நடைபெறத் தொடங்கின. மதுரைக்குத் திரும்பிய விசுவநாதனின் செவி களில் நாலாபுறங்களில் இருந்தும் எழும்பிய போர் முரசுகள் ஒன்றாக ஒலித்தன. முழு மூச்சோடு சாளுவ நரசிம்மர் வஞ்சம் தீர்க்க முனைந்து விட்டார் என்பதை அவன் கண்டு கொண்டான்.

மதுரைக்கு வடக்கே தஞ்சையிலிருந்து சாளுவர் தனியாட்சி முரசு முழங்கினார்; தெற்கே கயத்தாற்றிலிருந்து பஞ்ச பாண்டி யர்கள் சங்கொலி எழுப்பினார்கள். கிழக்கே தும்பிச்சி நாயக்கர் பரமக்குடியிலிருந்து துள்ளி எழுந்தார். மேற்கே கம்பத்து வாணாதி ராயர் கலவரங்களில் இறங்கி விட்டார்.

இவற்றையெல்லாம் மிஞ்சக் கூடிய பயங் கரமான செய்தி தென்பாண்டி நாட்டி லிருந்து விசுவநாதனுக்கு வந்து சேர்ந்தது. தென்காசியிலிருந்து திருவல்லப பாண்டியன் தனக்குப் படை உதவி கோரி அப்துலை விசுவநாதனிடம் அனுப்பி வைத்திருந்தான். —சேரன் உதயமார்த்தாண்டன் பெரும்படை யோடு தென்பாண்டி நாட்டைக் கைப்பற்று வதற்குத் தென்காசியை நெருங்கிக் கொண் டிருந்தானாம்!

திரும்பிய திசைகளிலெல்லாம் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்த காட்டுக்குள் அகப் பட்ட சிங்கமானான் விசுவநாதன். காட்டுத் தீயோ கணத்துக்குக் கணம் அவனை நெருங்கி வந்து கொண்டிருந்தது. அவனைச் சுட்டுப் பொசுக்கி அவன் சாம்பலை வைகை யில் கரைத்துவிட்டே அமைதியுறுவது என்று சூளுரைத்திருந்தாராம் சாளுவர்!

மதுரை அரண்மனையில், சந்திர சேகர பாண்டியரின் கூடத்தில் கூண்டுப் புலியென அமைதியற்றுக் குறுக்கு நடை நடந்து கொண்டிருந்தான் விசுவநாதன். பாண்டியர், அரியநாத முதலியார், ராமபத்திர நாயக்கர், அப்துல் ஆகியோர் துடிப்போடு அவன் சொல்லுக்காகக் காத்திருந்தனர்.

''சீரழிந்து கிடந்த நாட்டைச் செம்மைப் படுத்தி இதற்குப் புது வாழ்வு தரவேண்டு மென்ற பேராசையால் நாம் பல ஆக்கப் பணிகளை மேற்கொண்டோம். நம்மவர்களே இப்போது நமக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டார்கள். நம்முடைய வெளிப் பகையைவிட நமக்கு இப்போது அபாயம் விளைவிப்பது நம் உட்பகைதான். பயங்கர மான சோதனைகளுக்கு மூல காரணமாகவும் வித்தாகவும் விளங்கும் சாளுவ நரசிம்மரை நாம் முதலில் முறியடிக்க வேண்டும்.''

ராமபத்திர நாயக்கரும் அரியநாத முதலி யாருமே அதிர்ச்சி யடைந்தனர். விசுவநாத னின் நெருங்கிய தொடர்பையும் அவ னுடைய கனவுகளையும் அறிந்தவர்கள் அவர்கள்.

''முதலில் தெற்கே உதயமார்த்தாண் டனை ஒடுக்கினால் பிறகு சாளுவ நரசிம்மர் கட்டுப்பட்டு விடுவார்'' என்றார் அரியநாத முதலியார்.

''ஆமாம், உடனே எங்களுக்குப் படை உதவி அனுப்பாவிட்டால் தென் பாண்டி நாடே சேரரின் வசமாகி விடும்!'' என்று பதறினான் அப்துல்.

''தென் பாண்டி நாட்டைச் சேரன் கைப் பற்றிக் கொள்ளட்டும். நீங்கள் இப்போ தைக்கு அவனை எதிர்த்துப் போரிட வேண் டாம். திருவல்லப பாண்டியரோடும் படைக ளோடும் மதுரைக்கு வந்து விடுங்கள். மது ரையை இப்போது காத்துக் கொண்டால் பிறகு நாம் இழந்தவற்றையெல்லாம் மீட்டு விடலாம்.—தென்பாண்டிய நாட்டை மீட்டுத் தருவது என் பொறுப்பு! திருவல்லபரிடம் இதைக் கூறி, உடனே வீரர்களுடன் இங்கு வந்து சேருங்கள்!''

விசுவநாதனின் போர்முறைத் தந்திரங் களில் முழு நம்பிக்கை கொண்டவர் முதலி யார். ஆனால் அவன் நேரடியாகத் தஞ்சை யைத் தாக்கினால் பிறகு அவனுக்கும் சாளுவ ருக்குமிடையே இருந்த உறவு அடியோடு துண் டிக்கப்பட்டுவிடும் என்று அவர் அஞ்சினார்.

''இளவரசே! முதலில் உதய மார்த்தாண் டனை முழு மூச்சோடு தாக்கிச் சேர நாட்டை நாம் கைப்பற்றிக் கொண்டோமானால் மற்ற அனைவருமே ஒடுங்கிப் போய்ச் செயலிழந்து விடுவார்கள்'' என்று குறுக்கிட்டார் அரிய நாதர். சாளுவர் மீது போர் தொடுப்பதை எப்படியாவது தவிர்த்துவிட வேண்டுமென்று அவர் வாதாடினார். ஆனால் விசுவநாதன் கேட்கவில்லை.

''முதலியார் அவர்களே! நீங்கள் எதற்காக இப்படிக் கூறுகிறீர்கள் என்று எனக்குப் புரி கிறது. என்னுடைய நெஞ்சில் புண் தோன்றி விட்டது என்பதற்காக அதைப் புரையோடும் படி விட்டுவிடச் சொல்கிறீர்களா? புண்ணின் ஆணிவேர், அதன் மூலம், என்னுடைய இரு தயத்தில்தான் இருக்கிறது. ஆனாலும் அதைத் தான் முதலில் கிறி எடுக்க வேண்டும். பாரதப் போரில் பார்த்தனுக்கு ஆலோசனை கூறிய கண்ணனைப் போல் விளங்க வேண்டிய நீங்களே இப்படி மனம் கலங்கினால்.....

இதில்... நாம்.... எப்படி வெற்றி காண முடியும்?''

ஒரே ஒரு கணம் விசுவநாதனின் குரல் தழுதழுத்தது. உடனே அவன் மீண்டும் தன் இதயத்தை இரும்பாக்கிக் கொண்டான்.

கட்டளைகள் பிறந்தன விசுவநாதனிடமிருந்து:

''திருவல்லப பாண்டியர் அவர் படைகளோடு மதுரைக்கு வந்துவிட வேண்டும். ராமபத்திர நாயக்கர் அவர் படைகளோடு கம்பத்துக்குச் செல்லட்டும். விஜயநகரத்துக்கு நாம் செய்தி அனுப்பித் தலைநகரத்தின் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்துவிட்டு, அச்சுதராயரை வீரர்களோடு இங்கு வரச் செய்வோம். அதற்கிடையில் உடனே நானும் அரியநாத முதலியாரும் தஞ்சைக்குப் படை நடத்திச் செல்கிறோம். சாளுவரை முறியடித்த பிறகு தெற்கில் உதய மார்த்தாண்டன் மீது திரும்புவோம்!''

விருந்தினனுகத் தஞ்சைக்குச் சென்று திரும்பிய அதே விசுவநாதன், இப்போது படை திரட்டிக் கொண்டு அங்கு புறப்படலானான். பாண்டிய நாட்டின் ஆக்கப் பணிகளில் அங்கங்கே ஈடுபடுத்தப்பட்டிருந்த பல வீரர்களும் போர் முனைக்குத் திருப்பி அழைக்கப்பட்டார்கள். விசுவநாதன் போர் வெறி கொண்டு விட்டான். அரியநாத முதலியாருக்கே அவன் போக்கு அச்சத்தைத் தந்தது.

படை வீரர்கள் திருச்சிராப்பள்ளியைக் கடந்து, தஞ்சையை நெருங்கி, அதன் எல்லையில் முகாமிட்டிருந்தார்கள். மாலைப் பொழுது மயங்கி இரவாகிக் கொண்டிருந்தது.

அரியநாத முதலியார் விசுவநாதன் தனித்திருந்த வேளை பார்த்து அவனை அணுகினர்.

''ஒரு ஆலோசனை...''

''என்ன?'' — விசுவநாதன் திரும்பினான்.

''தஞ்சையில் போர் நடக்கும் காலத்தில் சாளுவ நரசிம்மர் அவரது குடும்பத்தாரை அங்கு வைத்திருக்க மாட்டார். போரில் அவரால் நம்மை எதிர்த்து வெற்றி பெற முடியாது. ஆகவே போர்க்களத்தில் அவர் உயிருக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால் குடும்பத்தில் உள்ளவர்கள் தங்களைத் தீக்கிரையாக்கிக் கொள்ளக் கூடும். அவரே அப்படிப்பட்ட ஆலோசனை கூறக் கூடியவர். அதனால் எப்படியும் தாங்கள் போருக்கு முன்பாக அவர்களைச் சந்தித்துப் பாதுகாப்பது நல்லது.''

விசுவநாதன் எதை நினைத்துத் தனக்குள் கலங்கிக் கொண்டிருந்தானோ, அதை அரியநாதரும் கூறிவிட்டார். லட்சுமியின் கருகிப்போன உடலைக்கூடக் கண்ணால் காண முடியாத நிலை ஏற்படலாம். அந்த நிலை ஏற்படுமானால் வாழ்நாள் முழுதுமே அவன் அதற்காகக் கலங்கித் தவிக்க வேண்டும். விசுவநாதனுக்கு நெஞ்சை அடைத்தது. ஏதும் பேச முடியவில்லை.

''இப்போதே வீரர்கள் சிலரோடு முன்னதாகத் தஞ்சைக்குப் புறப்படுங்கள். எப்படியாவது மாளிகைக்குள் சென்று இளவரசியாரைத் தனியே காண முயலுங்கள். அந்த முயற்சியில் ஒருவேளை சாளுவரையே சந்திக்க நேர்ந்தாலும், படைகளோடு வந்திருப்பதைக் கூறி அவரைப் பணிந்து விடும்படி எச்சரிக்கை செய்யுங்கள். அதற்குள் நானும் படைகளுடன் வந்து விடுகிறேன். இளவரசியாரை மட்டிலுமாவது தாங்கள் மீட்டு வந்துவிட வேண்டும்.''

அரியநாத முதலியாருக்கு இருந்த கவலையை விசுவநாதனால் உணர முடிந்தது. அவருடைய ஆலோசனைப்படியே இரவோடு இரவாக அவன் மெய்க்காவல் வீரர்களுடன் தஞ்சைக்குள் புகுந்தான். ஆனால் தஞ்சை நகரம் அளித்த இரவு நேரக் காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது.

நகரம் வெறிச்சோடிக் கிடந்தது. தெரு விளக்குகள் ஏற்றப்படவில்லை. காவலர்களின் நடமாட்டத்தையே காணோம். தெருவோரத்து வீடுகள் பல பூட்டப்பட்டிருந்தன. வரவிருந்த படையெடுப்பை முன்னதாகவே அறிந்து கொண்டு சாளுவர் நகரத்து மக்களை வெளியேறச் செய்திருந்தார்.

விசுவநாதனின் இதயம் படபடத்தது. சாளுவ நரசிம்மரின் மாளிகையை நோக்கி விரைந்தான். மாளிகையின் முகப்பு வாயில் பூட்டிக் கிடந்தது. உள்ளே யாரும் இருந்ததாகவே தெரியவில்லை.

## அத்தியாயம் இருபத்துமூன்று

# எங்கே லட்சுமி?

பூட்டை உடைத்துக் கொண்டு விசுவநாதனும் வீரர்களும் மாளிகைக்குள் புகுந்தனர். அறைகளும் கூடங்களும் தாழிடப்பட்டிருந்தன. மாளிகை முழுவதிலும் தேடிக் களைத்துவிட்டு, வேறு யாரையும் காணுமல், பின்புறம் தோட்டத்து மூலையில் குடியிருந்த வயது முதிர்ந்த பணியாளன் ஒருவனையும், அவன் மனைவியையும் விசுவநாதனிடம் அழைத்து வந்தனர் வீரர்கள்.

அவர்களிடம் விசாரித்துப் பார்த்ததில் லட்சுமியையும், அவள் அன்னையாரையும் சாளுவர் முன்னதாகவே எங்கோ அனுப்பிவிட்டுப் பிறகு படைவீரர்களுடன் தாமும் சென்றுவிட்டார் என்பது மட்டிலுமே தெரிந்தது. அவர்களை எங்கு அனுப்பினர்? அவர் தம் படைவீரர்களோடு எங்கு சென்றார்? ஒன்றுமே புலப்படவில்லை விசுவநாதனுக்கு.

''நாம் போருக்குப் புறப்படும் செய்தியை முன்னதாகவே அறிந்து கொண்டு, அவர் நகரத்தை விட்டு வெளியேறியிருக்கிறார். வேறு ஏதேனும் இரகசியத் திட்டம் வகுத்திருப்பார் என்று தெரிகிறது. எதற்கும் நான்

இப்பொழுது
நடைபெறுகிறது

சென்னை
சாந்தி டிலக்ஸ் ஏர்கண்டிஷண்ட்
கிரௌன்
புவனேசுவரி
மற்றும்
தென்னகமெங்கும்

சிவாஜி
கணேசன்
அளிக்கும்

ஸ்ரீ விஜயலக்ஷ்மி பிக்சர்ஸ்

# சரஸ்வதி சபதம்

ஈஸ்ட்மென் கலர்

பாடல்கள் - கவிஞர் கண்ணதாசன் - இசை - K.V. மகாதேவன்
ஒளிப்பதிவு - பிரசாத் - கலை - கங்கா - பாடல்கள் ஒலிப்பதிவு - T.S. ரங்கசாமி
ஸ்டுடியோ - சாரதா (மெஸர்ஸ் ஆப் மெஜஸ்டிக் ஸ்டுடியோ)
ப்ராஸஸிங், பிரிண்டிங் - ஜெமினி ஸ்டுடியோஸ் கலர் லேபரட்டரி

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் - A.P. நாகராஜன்




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகளை அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டெண்ட்டல் அட்வைசரி ப்யூரோ. தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




**COUPON**

K.4

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................................................

*Address* ..............................................................

..............................................................

இங்கு காத்திருக்கிறேன். முதலியாரிடம் விவரத்தைக் கூறி அழைத்து வாருங்கள்'' என்று வீரர்களை அனுப்பிவிட்டு, விசுவநாதன் மட்டிலும் தோட்டத்துக்குள் நுழைந்தான்.

லட்சுமியை அங்கு காண முடியாத ஏமாற்றத்தால் அவன் சித்தம் குழம்பிவிடும் போலிருந்தது. நேரே தோட்டத்து மண்டபத்துக்குச் சென்று தூணில் சாய்ந்தான். கிழக்கு வெளுத்துப் பொழுது புலரும்வரையிலும் அந்த இடத்தை விட்டே எழுந்திருக்கவில்லை.

விநாடிகள் யுகங்களாக நீண்டுகொண்டிருந்தன. உடல் வலிமை, உள்ளத்து உறுதி, நினைக்கும் ஆற்றல் இவை யாவற்றையுமே அவன் இழந்து விடுவான் போலிருந்தது. வாழ்க்கையே பொருளற்று, சுவையற்று, உயிரற்றுச் சூனியத்தில் கரைந்து விட்டது போன்ற ஒரு பிரமை அவனுக்கு.

நேரம் ஊர்ந்து கொண்டிருந்தது. தோட்டத்துப் பறவைகள் அவனைக் கண்டு நகைப்பவை போல் குரல் எழுப்பத் தொடங்கின.

காய்ந்த சருகுகளின் சலசலப்புச் சத்தம் கேட்கவே, திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான் விசுவநாதன். பணியாளனின் மனைவியாகிய அந்தக் கிழவி அவனை அச்சத்தோடு கூர்ந்து நோக்கியபடி அருகில் வந்தாள்.

''தாங்கள் இங்கே வந்தால் இதைக் கொடுக்கும்படி இளவரசியார் கூறினார்கள்'' என்று விசுவநாதனிடம் ஓர் ஓலையை நீட்டினாள்.

''வேறு ஏதும் கூறினாரா?''

''இல்லை.''

லட்சுமியையே நேரில் கண்டுவிட்ட பரபரப்போடு ஓலைச் சுருளைப் பிரித்தான் விசுவநாதன். அவள் எழுதியிருந்தாள்:

''இளவரசே! நான் எங்கு அனுப்பப்படுகிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. ஒருவேளை சேர நாட்டுக்கு அனுப்பப்படலாம். தாங்கள் நிறைவேற்றத் தவறியதை உதயமார்த்தாண்டன் நிறைவேற்றினால், அவருக்கே என்னை மணம் முடித்துக் கொடுக்க என்னுடைய தந்தையார் நினைத்திருக்கிறார்.

''இந்தப் பிறவியில் இனி நான் வேறு யாரையும் மணக்கப் போவதில்லை. எப்படியாவது என் உயிரைக் காத்துக்கொண்டு ஓடோடியும் வந்து உங்கள் பாதங்களில் விழுந்து கதற வேண்டும். அப்படி என்னால் முடியாவிட்டால் தங்களை நினைவைச் சுமந்தவாறே உயிர் துறந்து விடுகிறேன்.

''நான் [illegible] [illegible]

[illegible]

கூறினீர்கள். அதற்கு நான் உடன்பட்டு வாக்களிக்காமற் போனது நான் செய்த பெரும் குற்றம். வாக்களித்திருக்க வேண்டும்; அதோடு அப்போதே என் அப்பாவைத் துறந்து தங்களுடன் புறப்பட்டிருக்க வேண்டும்.

''முடிவு செய்ய வேண்டிய தருணத்தில் முடிவு செய்யத் தயங்கினால், பிறகு வருந்த வேண்டிய நிலை வரக்கூடும் என்று கூறினீர்கள். அதன் பொருளை நான் அப்போது உணரவில்லை. தாங்கள் இங்கிருந்து சென்ற பிறகுதான் உணர்ந்தேன். உணர்ந்து என்ன பயன்?

''என் தந்தையின் அதிகார வெறிக்கு நான் என் உயிரைப் பலி கொடுக்க நேர்ந்தாலும், என் உள்ளம் உங்களுடைய நேர்மைத் திறனை ஒருபோதும் இனி மறக்காது. உங்களோடு வாழக்கூடிய பாக்கியத்தை எனக்கு இறைவன் அளிக்க வேண்டும். நீங்கள் எங்கு எப்படி வாழ்ந்தாலும் நான் உங்களுடைய அடிமையாக, உங்களுக்கு ஊழியம் செய்யும் நற்பேறு பெற்றவளாக வாழ வேண்டும்... இயலாவிட்டால் ஒரே ஒரு முறை உங்களை நேரில் கண்டு உங்கள் உள்ளத்தைப் புண்படுத்தியதற்காக மன்னிப்புக் கோர வேண்டும்... இறைவனின் கருணை யிருந்தால் எப்படியும் உங்களை நாடி வந்துவிடுவேன்... வருகிறேன்.''

கண்ணீர் அருவி பொங்க அந்த ஓலையை மீண்டும் மீண்டும் படித்தான் விசுவநாதன். வேறு எல்லா நினைவுகளுமே அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டன. சாளுவர் எங்கிருந்தாலும் அவரைத் தேடிப்பிடிக்க வேண்டுமென்ற நோக்கம்கூட அந்தப் பொழுதில் அவனை விட்டகன்றது. அரசு, நாடு, ஆட்சி, லட்சியம் அனைத்தையுமே அவன் மறந்து விட்டான்.

தேம்பி அழும் சிறு குழந்தையானான் விசுவநாதன். பின்னர் தூணில் சாய்ந்திருந்தவன், சரிந்து, தரையில் செயலிழந்து விழுந்தான். பகல் பொழுது அவனுடைய ஒளி மங்கிய விழிகளுக்கு இரவுப் பொழுதாகத் தோன்றியது.

எவ்வளவு நேரம் ஆயிற்றோ தெரியாது. மண்டபத்தில் மயங்கிக் கிடந்த விசுவநாதனைக் கண்டுவிட்டு, அவனருகில் ஓடோடி வந்தார் அரியநாத முதலியார். அவனை மெல்லத் தட்டி எழுப்பினார். மயக்கம் தெளிவித்தார்.

மௌனமாக லட்சுமி அவனுக்கு எழுதிய ஓலையை முதலியாரிடம் கொடுத்தான் விசுவநாதன். அதைப் படித்தவுடன் அவருக்கு எல்லாமே விளங்கிவிட்டன. துயரம் அவருடைய நெஞ்சிலும் அலைமோதத் தொடங்கியது.

''இளவரசே! ஒரே ஒரு வேண்டுகோள்...'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார் அரியநாத முதலியார்.

''என்ன?''

''இளவரசியாரைத் தேடித் [illegible] சேர்ப்பிக்க வேண்டிய முழுப் பொறுப்பையும் தாங்கள் என்னிடம் விட்டுவிட வேண்டும். [illegible] துன்பச் சுமையைத் [illegible] [illegible] கவலையற்று இருக்க வேண்டும். எப்படியும் நான் அவர்களைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன்.''

விசுவநாதன் அரியநாத முதலியாரை உற்றுப் பார்த்தான். முதலியாரின் விழிகளும் கலங்கி யிருந்தன.

''முதலியார் அவர்களே! என்னால் தாங்க முடியவில்லை; தாங்கவே முடியவில்லை!''

என்று அவர் மடியில் விழுந்து கதறினன் விசுவநாதன்.

''கோழையைப் போல் தாங்கள் நடந்து கொள்ளலாமா?'' என்று அவனைக் கேட்டு விட்டுத் தாமும் கண்ணீரை அடக்க முடியாமல் தவித்தார் முதலியார்.

மாபெரும் வீரர்கள் இருவர், மலை குலைந்தாலும் மனம் குலையாத இருவர், போர்க்களங்களை விளையாட்டுக்களங்களாகக் கருதும் இருவர், நாடாளும் திறனும் சிந்தனையாற்றலும் பெற்ற இருவர் அங்கே தங்களை இழந்து தடுமாறித் தவித்தனர்.

பின்னர் தமது உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு, ''உம்! எழுந்திருங்கள்; காலதாமதத்துக்கு இனி இடமில்லை'' என்றார் முதலியார். ''இளவரசியாரை மீட்டு வரும் பணிக்கு நான் ஆட்களை அனுப்புகிறேன்; அடுத்து எடுக்க வேண்டிய நடவடிக்கைகளை நாம் உடனே கவனிக்க வேண்டும்.''

விசுவநாதன் மீண்டும் விஜயநகரத்து ஊழியனாகவும், நாட்டு மக்களின் காவலனாகவும் மாறினன்.

''உதய மார்த்தாண்டனின் படைகள் முன்பே தென் பாண்டி நாட்டை நெருங்கி விட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. இதற்குள் அவன் தென்காசியைக் கைப்பற்றி இருக்கக் கூடும். சாளுவநரசிம்மர் தம்முடைய படைகளோடு உதய மார்த்தாண்டனிடம்தான் சென்றிருப்பார். லட்சுமியை மணந்து கொள்ளும் ஆவலாலும், தமிழ் நாட்டுக்கே சக்கரவர்த்தியாகி விடவேண்டுமென்ற ஆவலாலும் உந்தப்பட்டு அவன் அங்கு பெரும் படைகளோடு வந்திருப்பான். சாளுவ நரசிம்மரின் போர் முறைத் தந்திரங்களும் வீரர்களின் உதவியும் இப்போது அவன் பக்கத்தில் இருக்கின்றன'' என்றான் விசுவநாதன்.

அரியநாத முதலியார் பலத்த யோசனையில் ஆழ்ந்தார்.

''விஜயநகரத்திலிருந்து நம் படை உதவி கோரியிருக்கிறேம். வந்து சேருவதற்குச் சிறிது தாமதமாகலாம்'' என்று தயக்கத்தோடு கூறினன் விசுவநாதன். சாளுவரும் மார்த்தாண்டனும் ஒன்றுசேர்ந்து விட்டதால், அவர்களை எதிர்த்து முறியடிப்பது அவ்வளவு எளிதல்ல என்பது அவன் கருத்து. மேலும் பாண்டிய நாட்டுக்குள்ளாகவே பரமக்குடி தும்பிச்சிநாயக்கர், கயத்தாறு பஞ்சபாண்டியர்கள் போன்றவர்களை விசுவநாதனுக்கு எதிராகத் தூண்டி விட்டிருந்தார் சாளுவ நரசிம்மர்.

''சூழ்ச்சிகளும் வஞ்சமும் கொண்ட பயங்கரமான பகைவர் சாளுவர்'' என்று அவனே மேலும் கூறினன்.

''ஆனாலும் தர்மத்தின் வலிமை தங்களிடம் இருக்கிறது. இளவரசியாரும் தங்கள் சார்பில் இருக்கிறார். உடலால் தங்களைப் பிரிந்திருக்க நேர்ந்தாலும் உள்ளத்தால் தங்கள் வெற்றியை வேண்டித் துடிக்கிறார் அவர்'' என்றார் முதலியார்.

அந்தச் சொற்கள் அவனுக்கு ஆயிரம் யானைகளின் வலிமையை ஒன்றாக அளித்தன.

''தொடங்குவோம் போரை!'' என்று முழங்கினன் விசுவநாதன். (தொடரும்)

**அட்டைப்பட விளக்கம்**

# புது யுகக் கவிஞர் பாரதி

மகாகவி பாரதியார் மிகச் சில ஆண்டுகளே வாழ்ந்திருந்தாலும், மிகப் பல புதுமைக் கருத்துக்கள் செறிந்த நிருகளைக் கவிதைகளைத் தேன் தமிழில் இயற்றித் தந்து இறவாப் புகழ் பெற்றுவிட்டார். நாட்டு விடுதலையையே தமது முழுமூச்சாகக் கொண்டு கவிதைக் குரலெழுப்பி முதல் முழக்கம் செய்த பாரதியார் மாதர் விடுதலையைப் பற்றியும் மறவாமல் பாடியிருக்கிறார். ''மாதர்தம்மை இழிவுசெய்யும் மடமையைக் கொளுத்துவோம்'' என்று அவர் பொங்கிப் பகர்ந்தது பார் முழுதும் பரவி மக்களிடையே விழிப்பை ஏற்படுத்தியது. ''வேதம் படைக்கவும் நீதிகள் செய்யவும் வேண்டி வந்தோம் என்று கும்மியடி -- சாதம் படைக்கவும் செய்திடுவோம் தெய்வச் சாதி படைக்கவும் செய்திடுவோம்'' என்று முழங்கிப் பெண்ணுரிமையை வலியுறுத்தி, அதை வழங்க மறுத்த பழம் சமுதாயத்தை எதிர்த்துச் சாடியிருக்கிறார்.

இந்த இதழ் அட்டைப் படத்தில் காணும் இளம் காதலர்கள் என்ன உரையாடுகிறார்கள்? அவள்-- அந்தப் புதுமைப் பெண் அப்படி என்னதான் கூறி விட்டாள்? மகிழ்ச்சிப் பெருக்கில் அவள் மதிவதனம் மலர்ந்திருக்கிறதே! அவள் சொன்னது அவன் கருத்துக்கும் ஒத்ததாக இருக்க வேண்டும். அதையே அவனும் மகிழ்ச்சியோடு ஆமோதிப்பதாகத் தோன்றவில்லையா ?

ஒரு வேளை,

'' மாதர்க்குண்டு சுதந்திரம்
என்று நின்
வண் மலர்த்திரு
வாயின் மொழிந்த சொல்

நாதந் தானது
நாரதர் வீணையோ ?
நம்பிரான் கண்ணன்
வேய்ங்குழல் இன்பமோ ?''

என்று அந்த வாலிபன் மெய்ம்மறந்து மகாகவியின் கவிதை வரிகளைப் பாடி அவளைப் பாராட்டுகிறானே! அப்படியானால் நாமும் அப்புதுமைப் பெண்ணைப் பாராட்டுவோம்.

'' வேதம் பொன்னுருக்
கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக்
காத்திடச் சொல்வதோ

சாதல் மூத்தல்
கெடுக்கும் அமிழ்தமோ
தையல் வாழ்க பல்
லாண்டுபல் லாண்டிங்கே ''

என்று அந்தப் புது யுகக் கவிஞரின் புளகமூறச் செய்யும் அமுத வாக்கை நினைவுகூர்ந்து மகிழ்வோம். மேற்படி வண்ண ஓவியத்தை எழிலுறப் படைத்து இந்த இதழ் மேல் அட்டையை அலங்கரித்திருப்பவர் ஓவியர் விஜயா.

# ஒரு பொழுது போக்கு




நாடோடி

சமீபத்தில் சிவனும், பார்வதியும் சினிமா பார்க்கச் சென்ற கதை எத்தனை பேருக்குத் தெரியுமோ, எனக்குத் தெரியாது.

கைலாயத்தில் சிவனுக்கு ஒரு வேலையும் இருக்கவில்லை. யாராவது தம்மை உள்ளம் உருகிக் கூப்பிட்டால் போய்க் காப்பாற்றலாம் என்றால் பூலோகத்திலிருந்து யாரும் கூப்பிடுவது கிடையாது. எல்லாரும் பூஜை பண்ணுகிறார்கள், மணி அடிக்கிறார்கள், ஹர, ஹராவென்று கன்னத்தில் போட்டுக் கொள்ளுகிறார்களே, ஆனால் யாருக்காவது உள்ளம் உருகுகிறதா என்பது சந்தேகம்தான்.

சிவபெருமானுக்கு உள்ளத்தின் பாவம்தான் முக்கியமே ஒழியப் புறச் செயல்கள் முக்கியம் அல்ல. ஆகவே பூலோகத்துக்குப் போக வேண்டிய நிமித்தமே ஏற்படவில்லை. கைலாயத்திலோ பொழுது போகவில்லை.

என்ன செய்வதென்று தெரியாமல் சிவன் உட்கார்ந்திருந்தார். அப்போது நாரதர் அங்கு வந்து சேர்ந்தார்.

சிவனும் பார்வதியும் உற்சாகமின்றி யிருந்ததைப் பார்த்து, நாரதர், ''என்ன கைலாசபதே! ஏன் வாட்டமாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''என்னத்தைப் பண்ணுகிறது? பொழுதே போகவில்லை. உற்சாகமாகச் செய்வதற்கு ஒரு வேலையும் இல்லை. யாராவது உள்ளன்போடு நம்மை அழைக்கிறார்களா வென்றால், அதையும் காணோம்.''

''பூ! பொழுது போகவில்லை என்று யாராவது கஷ்டப்படுவார்களா? நீங்கள் பேசாமல் கைலாயத்தில் ஒரு சினிமாக் கொட்டகை கட்டினால் தினம் பொழுது போக சினிமா பார்த்துக்கொண்டிருக்கலாம். உங்கள் பூதகணங்களிடம் டிக்கட் வாங்கிக் கொண்டு விடுவது என்று வைத்துக் கொண்டால் இதை ஒரு பிழைப்பாகவும் நடத்தலாம்.''

''சினிமாவா? அப்படி என்றால் என்ன?''

''ஓஹோ! தாங்கள் பூலோகம் போய்ப் பல வருஷங்கள் ஆகிவிட்டதோ! அதுதான் சினிமாவைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. அப்படியானால் வாருங்கள். உங்களைப் பூலோகத்துக்கு ஒரு சினிமாவுக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்று சென்னையில் தமிழ்ப் படம் நடந்து கொண்டிருந்த ஒரு கொட்டகைக்கு அழைத்துக் கொண்டு சென்றார்.

வேடிக்கை என்னவென்றால், அன்று அங்கு சிவ பார்வதி கதைதான் நடந்து கொண்டிருந்தது. சிவனும், பார்வதியும் 'டூயட்' பாடிக் காதல் புரிந்து கொண்டிருந்தார்கள். கதாநாயகனும், நாயகியும் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து ஆடிப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

''என்ன நாரதரே! நானும் பார்வதியும் இப்படியா காதல் புரிந்து கொண்டிருந்தோம்!'' என்று கேட்டார் சிவன்.

''நான் என்னத்தைக் கண்டேன், பிரபு! தாங்கள்தான் பார்வதியோடு ஏகாந்தமாகத் தங்கியிருந்த வனத்தில் எந்த ஆண் நுழைந்தாலும் பெண்ணாக மாற வேண்டும் என்று சபித்திருந்தீர்கள். அதனால் சுத்யும்னன் என்னும்



அரசன் பெண்ணாக மாற, இளை என்று பெயர் வைத்துக் கொண்டு புரூரவனைப் பெறவில்லையா?''

''என்ன நாரதரே! தாங்கள் தேவி பாகவதம் படித்திருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். அதிலுள்ள கதையும் எனக்குத் தெரியும். தாங்கள் ஒப்பிக்க வேண்டாம். ஆனால் காதல் புரியும் போது யாரும் 'டூயட்' பாடுவதை நான் தேவலோகத்தில் கண்டதில்லை. அதிலும் இப்படித் தாளம் தவறாமல் பாடுவதைக் கண்டதில்லை. காதல் உணர்ச்சி அதிகமாக இருக்கும் போது தாளம் தவறுவது போலக் காட்டினால் தானே நன்றாயிருக்கும்!''

''ஏது, படம் பார்க்க ஆரம்பித்து ஐந்து நிமிஷங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் படம் எப்படிப் பிடிக்க வேண்டும் என்று சொல்ல ஆரம்பித்து விட்டீர்களே! அப்படியானால், தாங்கள் கொட்டகை முதலாளி ஆவதற்குப் பதில் படாதிபதியே ஆகி விடலாம்.''

''அது என்ன படாதிபதி?''

''தாங்கள் எப்படிக் கைலாயத்துக்கு அதிபதியோ, அதைப் போல் படத்துக்கு அதிபதி. அது இருக்கட்டும், காதல் உணர்ச்சியில் உள்ள இந்த நடிகர்கள் எப்படித் தாளம் தவறாமல் பாடுகிறார்கள் என்பதற்குக் காரணம் தெரியுமா?

காரணம், அவர்கள் பாடாததுதான். இவர்களுக்குப் பதில் வேறு ஆணும் பெண்ணும் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் அதற்கேற்ப வாயை அசைத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''ஆமாம், பாடுகிறார்களே, அந்த ஆணும், பெண்ணும் கலியாணம் ஆனவர்களா?''

''அவர்களுடைய கலியாணக் கவலை உங்களுக்கு எதற்காக? நீங்கள் ஏதாவது ஜாதகம் பார்த்துக் கொடுக்கப் போகிறீர்களா?''

''விளையாடாதீர், நாரதரே! நான் ஒரு காரணமாகத்தான் கேட்கிறேன்.''

''அப்படியானால், இதோ விசாரித்துக்கொண்டு வந்து சொல்கிறேன்'' என்று நாரதர் எங்கோ செல்லப் பார்க்கிறார்.

''அப்படியே இன்னொரு விஷயம். அந்தக் கதாநாயகிக்கும், கதாநாயகனுக்கும் கலியாணமாகி விட்டதா என்று கேட்டுத் தெரிந்து கொண்டு வாருங்கள்.''

சரியென்று நாரதர் அப்பால் செல்கிறார்.

சிவனுக்குத் திடீரென்று கோபம் ஏற்பட்டதைக் கண்டு பார்வதி ஆச்சரியப்படுகிறாள். ''இது என்ன இது! பொழுது போக்குக்காகச் சினிமாப் பார்க்க வந்தீர்களா? யார், யாருக்குக் கலியாணம் ஆகியிருக்கிறது என்று விவரம் விசாரிக்க வந்தீர்களா?''

''நீ பேசாமல் இரு, பார்வதி! நான் இப்பொழுது விசாரிப்பது விளையாட்டுக்காக அல்ல.''

இதற்குள் நாரதர் திரும்பி வந்தார்.

''முதலில் இரவல் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்களே, அவர்கள் கதையைச் சொல்கிறேன். இரண்டு பேருக்கும் கலியாணமாகி விட்டது'' என்று ஆரம்பித்தார்.

''கலியாணமாகி விட்டதா? நல்லது, குழந்தைகள் உண்டா?''

''பெண் பாடகிக்கு ஐந்து பெண்களும், ஆண் பாடகருக்கு நான்கு பிள்ளைகளும் இருக்கிறார்கள்.''

''அது எப்படி ஒருவருக்கு ஐந்து பெண்களும், இன்னொருவருக்கு நான்கு பிள்ளைகளும்? அவர்கள் புருஷனும் மனைவியும் இல்லையா?''















"ஐயோ! அவர்கள் காதில் இது விழுந்தால் இரண்டு பேர்களும் சேர்ந்து நம் முதுகுகளைப் பதம் பார்த்துவிடப் போகிறார்கள். பெண் பாடகியின் குடும்பம் வேறு, ஆண் பாடகரின் குடும்பம் வேறு."

"அப்படியானால் அவர்கள் எப்படி அத்தனை துணிச்சலாகக் காதல் பாட்டுக்களைப் பாடுவார்கள்! அது இருக்கட்டும், கதாநாயகன், கதாநாயகியின் விஷயம் என்ன? அவர்களாவது கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களா?"

"கதாநாயகிக்குக் கல்யாணமாகிப் பேரன் பேத்திகள் இருக்கிறார்கள். கதாநாயகனுக்கு இன்னும் கலியாணமாகவில்லை."

"பேரன், பேத்திகள் இருக்கிறார்களா? அப்படியிருந்துமா அவன் தன்னைக் குமாரி என்று அழைத்துக் கொள்ளுகிறாள்?"

"அதில் என்ன தவறு? அவளுடைய தாயாருக்கு அவள் குமாரிதானே!"

"இந்த விளையாட்டு இருக்கட்டும், நாரதரே! இனி இந்த அக்கிரமத்தை என்னால் ஒரு கணமும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. இந்தப் படக் கொட்டகையை நான் உடனே அழித்துவிடப் போகிறேன். அன்று தட்சனின் யாகத்தை அழித்தது பொய், இன்று இப் படக் கொட்டகையை அழிக்கப் போவது மெய் என்று நிரூபிக்கப் போகிறேன்!"

"ஏன் இப்படிச் சீறுகிறீர்கள்? திடீரென்று உங்களுக்கு என்ன வந்து விட்டது?" என்று கேட்டாள் பார்வதி.

"ஏன் சீறுகிறேனா? ஏன் பார்வதி, நீகூட மறந்து விட்டாயா? எண்பத்தேழாயிரம் வருடங்கள் நான் உன்னோடு பேசாமல் இருந்தேனே, மறந்து விட்டாயா?"

"பார்வதியோடு பேசாமல் இருந்தீர்களா? எனக்குத் தெரியாதே!" என்றார் நாரதர் வியப்போடு.

"இது ராமாயண காலத்தில் நடந்த கதை. அந்த எண்பத்தேழாயிரம் வருஷங்களும் நான் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டு நீங்கள் என் பக்கமே வரவில்லை. ஆனால் பார்வதியோடு பேசக் கூடாது என்று நான் அந்தக் காலம் முழுவதிலும் தியானத்தில் இருந்தேன். சீதையைத் தேடிக் காட்டில் அலைந்து கொண்டிருந்த ராமனை நான் பரப்பிரம்மம் என்று தெரிந்து கொண்டு நான் மானசீகமாக நமஸ்கரித்தேன். அதைக் கண்ட பார்வதி நான் யாரோ அரச குமாரனை நமஸ்கரிக்கிறேன் என்று நினைத்து ராமனைப் பரீட்சிப்பதற்காகச் சென்றாள். சீதையைப் போலவும் வேஷம் போட்டுக் கொண்டு ராமனுக்கு முன்னால் நடந்து சென்றாள். ஆனால் ராமனை ஏமாற்ற முடியுமா? அவன் பார்வதியை வணங்கி, 'அம்மா! கைலாசபதி சௌக்கியமா? தாங்கள் ஏன் தனியாக இந்த வனத்தில் அலைந்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டான். இது பார்வதிக்கு அவமானமாக இருந்தது. எனக்கும் அவமானமாயிருந்தது."

"தங்களுக்கு அவமானமாக இருப்பானேன்?"

"பார்வதி சீதை வேஷம் போட்டதிலிருந்து அவளைத் தொடுவதற்கே எனக்குப் பிடிக்கவில்லை. அவளைத் தொட்டால் பிறன்

# தலைவலி

எவ்வளவு கடுமையாயினும்

உபாதை

## வலிக்கும் பகுதியில்

மட்டுமே

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உடலுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள் பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் தசைவலி தலைவலி, சுளுக்கு மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும் மற்றும் மார்ப்புச்சளி, ஜலதோஷம் போன்றவைக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம் ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக் கணக்கில் வரும்.

அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டுவரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி

மனைவியைத் தொடுவதைப் போன்ற பாவம் ஏற்பட்டுவிடும் என்று தோன்றிற்று. ஆகவே நான் எண்பத்தேழாயிரம் வருடங்கள் நான் பார்வதியோடு பேசவில்லை.''

''ஆகவே...?'' என்று கேட்டார் நாரதர்.

''ஆகவேதான் சினிமாக் காதலர்களையும், அவர்களுக்கு இரவல் குரல் கொடுத்தவர்களையும் கண்டால் எனக்குக் கோபம் கோபமாக வருகிறது. ஒரு சிறு சிதை வேஷத்தைக் கண்டு கோபப்பட்ட எனக்கு இவர்கள் காதலர்களைப் போல் வேஷம் போட்டுக் கொண்டிருப்பதோடு, ஆடிப் பாடிக் குதிக்கிறார்களே, அதுதான் வெகு எரிச்சலாக இருக்கிறது.''

பார்வதி குறுக்கிட்டாள்.

''வெகு அழகாக இருக்கிறது. நீங்கள் பேசுவது! அதெல்லாம் அந்தக் காலம். அந்தக் காலத்தில்தான் தாங்கள் செய்த அத்தனை அட்டூழியங்களையும் நான் சிவனே என்று பொறுத்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது அப்படி வாயை மூடிக் கொண்டிருப்பேன் என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''என்ன பார்வதி! நீயா இப்படிப் பேசுகிறாய்?''

''ஆமாம். நான்தான் இப்படிப் பேசுகிறேன். பழைய பார்வதியிடம் பேசாமல் இருந்ததெல்லாம் அந்தக் காலம். ஆனால் இப்பொழுது அப்படிச் செய்தால் எனக்கு உரிமைகளுக்காகப் போராட வழி யிருக்கிறது என்பது ஞாபகம் இருக்கட்டும்!''

''என்ன நாரதரே! பார்வதி இப்படி விபரீதமாகப் பேசுகிறாளே!''

''பின்னே, 'ஜகஜ்ஜனனி' என்று பெயர் வைத்துக் கொண்டு, இன்று உலகில் உள்ள என் பெண்களுக்கு உள்ள உரிமை எனக்கு இல்லையா? அவர்கள் எல்லாரும் எத்தனை துணிச்சலுடன் தங்கள் கணவன்மார்களுடன் பழகுகிறார்கள்? அப்படியிருக்க அவர்களுக்கெல்லாம் தாயாகிய நான் தங்களைக் கண்டு பயப்படுவதா?''

''என்ன நாரதரே! இத்தகைய தாம்பத்திய கலகத்தைக் கிளப்புவதற்காகத்தான் இப்படி எங்களைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு வந்தீர்களா?'' என்று கேட்டார் சிவன்.

''தாங்கள் பொழுது போகவில்லை என்று சொன்னதால் அழைத்து வந்தேன்.''

''இப்படி இங்கு வந்து புருஷன்—மனைவி சண்டை போட்டுக் கொள்வதற்குப் பதில், இந்தச் சண்டையைக் கைலாசத்திலேயே போட்டுக் கொண்டிருந்திருக்கலாமே! என்ன பார்வதி! என்ன சொல்கிறாய்?''

இந்தச் சமயம் படத்தில் நடித்துக் கொண்டிருந்த பார்வதி தன் வலது தோள்பட்டையைத் தன் முகவாய்க் கட்டையால் இடித்தாள்.

''பொழுது போக்க இந்தப் புது வழியை நீங்கள்தான் கண்டுபிடித்துவிட்டதாகப் பெருமையடித்துக் கொள்ள வேண்டாம். பூலோகத்தில் உள்ள எல்லாப் பெண்களுக்கும் தெரிந்த வழிதான் இது. அவர்கள் இந்தக் காரியத்தைத்தான் எப்பொழுதும் செய்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் பார்வதி.

# பூதானம் பிறந்தது!

ஹைதராபாத்தில் பலாத்காரமும், கலவரங்களும் நடந்து வந்தன. அங்கு சென்ற விநோபா நிலைமையைத் தெரிந்து கொண்டார். நிலப் பிரச்னையே இந்தக் கலவரங்களுக்கு அடிப்படை என்பதைக் கண்டார். ஒரு நாள் சிலர் அவரிடம் வந்து, ''நாங்கள் மிகவும் கஷ்டப்படுகிறோம்! எங்களுக்கு உதவியளியுங்கள், பாபா'' என்றனர்.

''உங்களுக்கு என்ன வேண்டும் என்பதைத் தெரிவியுங்கள்.''

''நாங்கள் வாழ்க்கையைச் சுகமாக நடத்த ஏதேனும் ஓர் உபாயம் செய்ய வேண்டும்.''

''அதற்கு உங்கள் யோசனை என்ன? நான் என்ன செய்யவேண்டும்?''

''நாங்கள் ஏழைகள், ஹரிஜனங்கள் மேலும் எழுத்தறிவில்லாதவர்கள்; விவசாயத்தைத் தவிர எங்களுக்கு எந்தத் தொழிலும்தெரியாது. கொஞ்சம் நிலம் வழங்கச் செய்வீர்களானால் போதும்.''



''எவ்வளவு நிலம்?''

''எங்கள் அனைவருக்குமாகச் சேர்த்து 80 ஏக்கர் நிலம் போதுமானது.''

அன்று மாலை கிராமப் பொதுக் கூட்டத்தில் விநோபா எழுந்து, ''இந்தக் கிராமத்து ஹரிஜனங்கள் 80 ஏக்கர் நிலம் கேட்கிறார்கள். இந்த 80 ஏக்கர் நிலத்தை வழங்க யாராவது தயாராக இருக்கிறீர்களா?'' என்றார்.

ஒரு வாலிபர் எழுந்தார்.

''நான் 100 ஏக்கர் நிலத்தை என் தந்தையின் நினைவாக வழங்குகிறேன்.''

''நீங்கள் மகிழ்ச்சியுடன் இதைச் செய்ய முன்வருகிறீர்களா?''

''ஆம், பாபா! மிக மகிழ்ச்சியுடன் வேண்டுமானால் எழுதித்தருகிறேன்.''

இது நடந்தது ஆந்திரத்தில் உள்ள போச்சம்பள்ளிக் கிராமத்தில். அன்று பூமி தானம் பிறந்தது.

—நா. சிவராமகிருஷ்ணன்

(சர்வோதயச் செய்தி)

(விநோபா அடிகளின் 72வது ஜெயந்தி 11-9-66 அன்று நாடெங்கும் கொண்டாடப்படுகிறது.)

# வட்டமேஜை

- இதோ ஓர் எடுத்துக்காட்டு!
- எண்களின் சிறப்பு
- தமிழ் எங்கே?
- பிறந்த குழந்தைக்கு பி. ஸி. ஜி.!

வட்டமேஜைப் பகுதியில் 'கார்' பற்றி பம்பாய் ரமணி எழுதியிருந்தார். அவர் கார் என்ற சொல் மேகத்தைக் குறிக்காது; கருமையைத்தான் குறிக்கும் என்றது தவறு. காளமேகப் புலவர் தமது செய்யுளில், '' 'கார்' என்று பேர் படைத்தாய் ககனத்து உறும்போது நீர் என்று பேர் படைத்தாய் நீள் நிலத்து வந்தபோது'' என்று மோரைப் பற்றிக் குறிப்பிடுகிறார் — எனவே, கார் எனில் மேகம் என்றும் தமிழில் பொருள் உண்டு. இன்னும் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. விரிவஞ்சி விடப்பட்டது.

சுந்தராபுரம்
19–8–66 சி. கே. இராமசாமி

ஜூலை 31ஆம் தேதி கல்கி இதழ் 65ஆம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள 'தேதிக்குக் கிழமை கண்டு பிடிக்க வழி' என்ற பகுதி நான் எழுதியுள்ள 'எண்களின் சிறப்பு' என்ற புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்புத்தகத்தின் நான்காம் பதிப்பு சென்ற ஆண்டு வெளி வந்துள்ளது.

திண்டுக்கல்
3–8–66 ம. கடலைமுத்துப்பிள்ளை

இத்துடன் அனுப்பாம்பட்டிலிருந்து — சென்னை சென்ட்ரலுக்கு வாங்கிய ரயில் டிக்கெட் ஒன்று அனுப்பியிருக்கிறேன். தமிழ் நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள அனுப்பாம்பட்டிலிருந்து வாங்கிய ரயில்

ANUPPAMBATTU TO
MADRAS

டிக்கெட்டில் தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் பெயர் அச்சடிக்கப் பட்டுள்ளது. தமிழ் எங்கே?

சென்னை–33
19–8–66 வெ. சுப்ரமணியம்

ராஜாஜி அவர்கள் குழந்தைகளுக்கு பி. ஸி. ஜி. குத்துவது சம்பந்தமாக இன்றைக்கு வந்துள்ள கல்கியில் மீண்டும் எழுதியிருப்பதைப் படித்தேன்.

என் மனைவி ஜூன் மாதம் திருவல்லிக்கேணி ஆஸ்பத்திரி ஒன்றில் பிரசவித்தாள். குழந்தை பிறந்த மறுநாள் சாயங்காலம் குழந்தைக்கு பி. ஸி. ஜி. குத்திவிட்டிருந்தார்கள். தாயின் சம்மதம் பெற்றுச் செய்ததாக எழுதப்பட்டிருந்தது. என் மனைவியைக் கேட்டதில் தனக்கு ஒன்றும் தெரியாது என்றாள். பிறர் குழந்தைகளுக்கும் அவ்வாறே செய்திருந்தார்கள்.

மூன்று மாதங்களாகியும் குழந்தை தேறாததற்கு இது ஒரு காரணமோ என்று தோன்றுகிறது. குழந்தைகள் விஷயத்தில் ஏன் இந்த விஷப் பரீட்சையோ? இருபத்திநாலு மணி நேரக் குழந்தைக்கு ஊசியா?

மதுரை — 1
25–8–66 எம். என். வேங்கடராமன்

தங்கள் 'கல்கி' வெள்ளிவிழாமலர் கிடைக்கப் பெற்றோம். மிக்க சந்தோஷம். அதே சமயத்தில் மிகவும் வருந்தத்தக்க நிகழ்ச்சி ஒன்றையும் குறிப்பிட விரும்புகிறோம். ''பாகிஸ்தானைப் பதற அடித்த இந்திய சேபர் விமானங்கள்'' என்று ஓரிடத்தில் பட விளக்கக் குறிப்பு வெளியிட்டுள்ளீர்கள். முதலாவதாக நமது இந்தியாவில் 'சேபர்' விமானங்களே இல்லை. நீங்கள் 'நாட்' விமானங்களை மனத்தில் எண்ணிக் கொண்டு அப்படி எழுதியிருக்கலாம். உண்மையில் நீங்கள் பிரசுரித்துள்ள படம் 'வேம்பயர் டிரைனர் - ஃபைட்டர்' விமானங்களாகும். இந்தத் தப்பான பிரசுரம் எங்களைப் போன்ற தமிழர்களுக்கு மிகவும் அதிர்ச்சியையும், வருத்தத்தையும் தந்தது.

தமிழ் மன்றம் இந்தியவிமானப் படை
20–8–66 31வது அணி

'எந்தத் திட்டம் நல்ல திட்டம்?' என்ற தலைப்பில் வெளியான கட்டுரையை மிக மிக வியப்போடு படித்தேன். இந்தியாவின் பெரும் தொழிலதிபரின் சகோதரர் ஒருவர் எழுதியது என்பதைக் காட்டிலும், நாட்டின் நிலையைத் தெள்ளென விளக்கியமைக்கக்கூடிய ஒரு பழுத்த அறிஞரின் கருத்துக் குவியல்கள் எனலாம்.

டில்லியின் முடிசூடா ராஜாக்கள் இந்தக் கட்டுரையைப் படித்த பின்னரேனும் விழிப் படைவார்களா?

தாராபுரம்
27–8–66 க. வி. சந்திரிகா

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

B/P/1/P/1/65 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon